# நாட்டிலுள்ள செயல்திறனை மேலும் சீராக்கி நாட்டின் வளத்தை மேம்படுத்துவதையே தனது குறிக்கோளாகக் கொள்வதன்றோ ஒருவரது மேதாவிலாசத்திற்குச் சான்று!



பல ஆண்டுகளுக்கு முன்பே—அதாவது 1890லேயே இந்தியா வின் ஏழ்மை நிலைக்குக் காரணம் வாய்ப்பின்மை என்பதை ஜெம்ஷெட்ஜீ டாடா உணர்ந்தார்.

அவ்வாய்ப்புகளை அளிப்பதற்கென்றே 1921ல் ஜெம்ஷேட்பூர் டெக்னிகல் இன்ஸ்டிட்யூட் துவங்கப்பட்டது. கடந்த ஐம்பத்து மூன்று ஆண்டுகளாக நாட்டின் நற்பணிக்காக மிகச் சிறந்த எஃகுத்துறை நிபுணர்கள், தலைசிறந்த இந்தியத் தொழில்நுட்ப அதிகாரிகள், எஞ்ஜினீயர்கள் மற்றும் டெக்னீஷியன்கள் இங்கு பயிற்சி பெற்றுள்ளனர். இவர்கள் இந்தியாவின் பொதுத் துறையிலுள்ள நிறுவனங்களாகிய ஹிந்துஸ்தான் ஸ்டீல், பொகாரோ ஸ்டீல் மற்றும் ஹெவி என்ஜினீயரிங் கார்ப்பொரேஷன் இவற்றிலும் டாடா அயர்ன் அண்ட் ஸ்டீல் கம்பெனியிலும் பணி புரிகின்றனர்.

**டாடா ஸ்டீல்**

HT-TIS-7354 A

# குழந்தைச் செல்வங்கள் எப்பொழுதும் முன்னணியில் நின்றிட அதிக சக்தியின் தேவையை நிறைவு செய்யுங்கள்

கொலம்பஸின் மறுபிறவி;
சாகசச் செயல்கள் செய்யும்
இவன் புதிய வழி கண்டு
பிடிப்பான் தினசரி—
பள்ளியிலிருந்து
வீடு திரும்ப இது



படு சுட்டிப்பெண்; வீட்டுப்
பாடமோ அல்லது வகுப்பிலோ—
அவள் விடை எப்பொழுதும்
சரிதான். வீட்டிலும் வரவு செலவு
கணக்கில் அப்பாவிற்கு உதவி
செய்கிறாள்.



## நீங்களும் உங்கள் குழந்தைக்கு நாள்தோறும் போர்ன்விடா கொடுங்கள்

உங்கள் குழந்தை முன்னணியில் நின்றிட அதிக சக்தியின் தேவையை பூர்த்தி செய்ய வல்லது மால்ட், பால் சர்க்கரை, கோகோ அடங்கியுள்ள போர்ன்விடாவேயாகும். ஒவ்வொரு டம்ளரிலும், ஓட்டத்திற்கு அதி தேவையான புரதம், கார்போஹைட்ரேட்கள், கலோரிகள் அடங்கியுள்ளது. அதனாலேயே உங்கள் குழந்தைக்கும் பிரதி தினமும் போர்ன்விடா கொடுங்கள்—இரண்டு வேளைகளிலும். உங்களுக்கும் அது உகந்தது. போர்ன்விடா குடும்பத்தில் எல்லோரும் விரும்பும் ஒரு பானம்.

காட்பரிஸ்

# போர்ன்விடா

**வளரும் குழந்தைகளுக்கு, இனிய போர்ன்விடா**




OBM-4033 TM


பெண் சிரித்தால்!
நடிகை சிரிப்பு
செட்லே அவங்கவங்க போட்டுகிட்ட டிரஸ் அவங்கவங்க எடுத்துக்குங்க!
பீச்சுக்கா? வேணும்... ஃபைவ் ஸ்டார் ஹோட்டலுக்குப் போவோம்!
காதலியின் சிரிப்பு மணிபர்ஸ் கரைப்பு!
நர்ஸ் சிரிப்பு
என் பேஷண்ட் பிரமாதமா கோஆபரேட் பண்றார்!



பெண் போலீஸ் சிரிப்பு
STOP
குடும்பத் தலைவி சிரிப்பு
• புது வேலைக்காரி பரவாயில்லையே! உங்க துணிகளை வெளுக்கச் சொன்னா உங்களையே வெளுத்துக்கட்டி இருக்காளே!
கலகல என்று சிரித்தாள் மருமகள்!
கம் என்று இருக்கச் சொன்னாள் மாமியார்!
• அப்புறம்?
• அப்புறம் என்ன கலகம் தான்!
வேலைக்காரி சிரிப்பு
பாலைக் குடிச்சுட்டு சமத்தா தூங்கிடணும்!...


டெட் சலவைக் கட்டி
சோப்பைவிட 1½ மடங்கு அதிக சக்தி வாய்ந்தது எளிதில் நுரைவிடாத நீரிலும்!
டெட் சலவைப் பவுடர்
பலவித பேக் சைஸ்களில் கிடைக்கிறது. துணிகளை ஊறவைத்து அலசுவதே நீங்கள் செய்யவேண்டியது. கைகளையும் மிருதுவாக வைக்கிறது.
என்-டெட்
கறை நீக்கும் என்சயம் அடங்கியது சக்தி வாய்ந்தது, ஆனால் கெடுதல் செய்யாதது.
new!
def
detergent washing cake
NEW!
TRIPLE ACTION
white
def
WASHES WHITEST
enzyme
def
washes away stubborn stains
கண்டதுமில்லை, காணப் போவதுமில்லை-இத்தகைய வெண்மை-பெறவே டெட்டின் தரமான தயாரிப்புகள்!
Shilpi HPMA 6A/74 Tam

# கல்கி

ஆனந்த தை. 27 ★ பிப்ரவரி 9, 1975




''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே! சம்பவங்களும் கற்பனையே.

இவ்விதழ் மேலட்டை வண்ணப்படம்: உத்தரா



''உன் மாமியார் செவ்வாய் கிரகத்தைப் பார்க்க ரொம்ப ஆசைப் படறதா சொன்னியே, ரிடர்ன் டிக்கெட் வேணும்னு ஆயிரம் ரூபாய் 'லஞ்சம்' தாறுமாம்!''

''ஓ.கே.! அங்கே போன பிறகு ரிட்டர்ன் டிக்கெட்டை அவளறியாமல் கிழிச்சுப் போட எத்தனை 'லஞ்சம்' தாறே?''

## எதிர்காலச் சிரிப்பு

விண்வெளி, கம்ப்யூட்டர், இயந்திர மனிதன், எலெக்ட்ரானிக்ஸ் யுகம் மேலநாடுகளில் இன்றே நிலவுகிறது. இந்தியாவிலும் எதிர்காலத்தில் இந்நிலை பரவும். அந்த எதிர் காலத்தை இன்றே கற்பனை செய்து 'ஜோக்' அடியுங்கள். உங்களுடைய எதிர்காலச் சிரிப்பில் அரசியல்வாதிகள், மனைவி, மாமனார்கள் போன்ற யார் வேணுமானாலும் இடம் பெறலாம். எதிர்காலத்தை நினைவுபடுத்துவதாக இருக்க வேண்டும் என்பதே நிபந்தனை. பிரசுரமாகும் நகைச்சுவைகளுக்குப் பரிசு உண்டு.

முடிவு தேதி: பிப்ரவரி 18ந் தேதி. உறையின் மீது 'எதிர்காலச் சிரிப்பு' என்று குறிப்பிடவும். பிரசுரத்துக்கு ஏற்கப்படாதவற்றைத் திருப்பி அனுப்ப இயலாது.

ஆசிரியர், கல்கி, சென்னை – 31

---



சோர்வா?
பலவீனமா?

சாப்பிடுங்கள்

# வாட்டர்பரீஸ் விட்டமின் டானிக் —
# விட்டமின்களும், இரும்புச் சத்தும், தாதுப்பொருட்களும் அடங்கிய பரிபூரண டானிக்



சில டானிக்குகளில் விட்டமின்கள் மட்டுமே உள்ளன. சிலவற்றில் தாதுச் சத்துக்களோ அல்லது இரும்புச் சத்தோதான் உள்ளன. வாட்டர்பரீஸ் விட்டமின் டானிக் பரிபூரணமானது. அதில் விட்டமின்களும், இரும்புச் சத்தும், தாதுச்சத்துக்களும் சமசீராக இணைந்துள்ளன—

தினமும் உற்சாகமும், சக்தியும், வலிமையும் கொடுக்கிறது.

விட்டமின்கள் நிரம்பியது




வாட்டர்பரீஸ்

## விட்டமின் டானிக்

சுருசுருப்பான ஆரோக்கியத்திற்கு
பரிபூரணமான டானிக்

Grant 9 TM

கல்கி

மலர் 34

இதழ் 28

தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற - எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

# செந்நீரில் மலர்ந்தது - கண்ணீரைச் சொரிகிறது!

**ப**ங்களா தேசம் ஜனாதிபதி ஆட்சிக்குத் தாவிவிட்டது.

சுதந்திர வாழ்வுக்காகப் பல்லாயிரக் கணக்கான மக்களைத் தியாகம் செய்து செந்நீரில் மலர்ந்த பங்களா தேசம், இன்று சர்வாதிகார ஆட்சிக்கு வந்து விட்டது. ஒரே கட்சி கொண்ட ஆட்சி, சகல அதிகாரங்களும் ஜனாதிபதிக்கே என்னும்போது அவரைச் சர்வாதிகாரி என்று அழைப்பதே சரி. எதிர்க் கட்சிகள் என்ற பேச்சுக்கே இடமில்லை. பாராளுமன்றமும் நீதிமன்றங்களும் கூட ஜனாதிபதியின் விருப்பத்துக்கு இசையவே இயங்க வேண்டும். பத்திரிகைச் சுதந்திரம் பறிபோய்விட்டது.

இவ்விதம் சர்வாதிகார ஆட்சிக்குத் தாவ அவசியம் இருந்ததாக ஷேக் முஜிபுர் கூறியிருக்கிறார். வங்க தேசம் பிறந்த நாள் முதலாகப் பலப் பல பிரச்னைகள். புயல் வெள்ளம் காரணமாகச் சேதங்கள் - பஞ்ச நிலை காரணமாகப் பட்டினிச் சாவுகள்- கள்ளக் கடத்தல், பதுக்கல் சந்தைகள்- அரசியல் கொலைகள், அகதிப் பிரச்னைகள். போதாக் குறைக்குத் தேசிய விமானப் போக்குவரத்துப் போன்ற டம்பாச்சாரித் திட்டங்கள், பொருளாதாரச் சீர்குலைவை ஏற்படுத்தியுள்ளன. இவற்றைச் சமாளித்து வெற்றி பெற அபரிமிதமான அதிகாரங்கள் தேவைப்பட்டன என்பது முஜிபுர் ரஹ்மானின் வாதம்.

ஆனால் 'சறுக்கினது சாக்கு' என்பதாகவும் 'அரங்கம் கோணல்' என்பதாகவுமே நமக்கு இந்த விளக்கம் தோன்றுகிறது. ஏனெனில் பாராளுமன்ற ஜனநாயக அமைப்பிலேயே முஜிபுர் ஏறத்தாழச் சர்வாதிகாரி நிலையில்தான் இருந்தார். பாராளுமன்றத்தில் அவர் கட்சிக்கு மிகப் பெரும்பான்மை ஸ்தானங்கள் இருந்தன. மக்களிடமும் சகாக்களிடமும் அவருக்கு இருந்த செல்வாக்கோ அபரிமிதமானது. இத்தனை வசதிகள் இருந்தும் அவரால் பிரச்னைகளைச் சமாளிக்க முடியவில்லை என்றால் ஒன்று சமாளிக்க முடியாத அளவில் பிரச்னைகள் இருந்திருக்க வேண்டும்; அல்லது எடுக்கப்பட்ட நடவடிக்கைகள் சரியா யில்லாது இருக்க வேண்டும்.

ஜனநாயக ஆட்சியிலிருந்து சர்வாதிகார ஆட்சிக்கு மாறிவிட்டதால் பிரச்னைகள் தீர்ந்துவிடப் போவதில்லை. எடுக்கப்படும் நடவடிக்கைகளைப் பொறுத்துத்தான் பலன்கள் இருக்கும்.

முஜிபுர் ரஹ்மான் மிகக் குறைந்த காலத்துக்கே நாட்டைச் சர்வாதிகார ஆட்சியில் வைத்திருப்பார் என்றும் வெகு சீக்கிரம் ஜனநாயக முறைக்கு நமது அண்டை நாடு திரும்பி விடும் என்றும் எதிர்பார்க்கிறோம். 'அதிகாரம் ஆணவத்தை வளர்க்கும், முழுமையான அதிகாரம் ஆணவத்தை முழுமையாக வளர்க்கும்' என்ற வாசகம் முஜிபுர் விஷயத்தில் பொய்த்துப் போனால் நம்மைவிட அதிகமாக மகிழக்கூடியவர்கள் யார்?

# ஜெயிக்க வேண்டியவர்கள் ஜெயித்தார்கள்!

**மே**ற்கிந்தியக் கோஷ்டி கிரிக்கெட் தொடரில் வெற்றி பெற்று விட்டது. கிரிக்கெட் ஆற்றலில் அவர்கள் நிச்சயம் சிறந்தவர்கள். எனவே அவர்கள் தோல்வியுற்றிருந்தால் சற்று வருத்தமாகக்கூட இருந்திருக்கும்.

இந்தக் கிரிக்கெட் தொடரில் தோல்வி நமக்குப் பெரிய விஷயமில்லை. இரண்டு டெஸ்ட்டுகளில் பெற்ற வெற்றியை எண்ணி மகிழலாம். ஆனால் பம்பாய் கிரிக்கெட் மைதானத்தில் மக்களுக்கும் போலீஸாருக்கும் இடையில் நடந்த போராட்டம் இந்திய கிரிக்கெட்டுக்குப் பெருந் தோல்வி. போலீஸாரின் ஆணவமும் கிரிக்கெட் நிர்வாகிகளின் சமயோசிதமின்மையுமே இந்தத் தலைக்குனிவை நமக்குத் தேடித் தந்து விட்டன.


வாங்க, வாங்க
என்ன தயக்கம்!
இந்திய
கம்யூனிஸ்ட்
கட்சி
ருஷ்யா
இந்திரா அம்மையார் தானே?
அர்ஜெண்டா அரிசி
வேணும். அதோட
மாநில சுயாட்சியும்
அனுப்பிவையுங்க!



ஸ்ரீமதி எம். எஸ்.



கிளப்வாலா ஜாதவ்



ஸ்ரீமதி துர்க்காபாய்



திரு தேஷ்முக்



சேத்னா

# என்ன சேதி?

## குடியரசு தின விருதுகள்

இது மாதர் சிறப்பிதழ் என்பதால் பத்மவிபூஷண் பட்டங்கள் பெற்றுள்ள மாதர்களை முதலில் வாழ்த்துவது பொருந்தும். ஸ்ரீமதி தாக்கர்ஸே, ஸ்ரீமதி மேரி கிளப்வாலா, ஸ்ரீமதி துர்க்காபாய் தேஷ்முக், ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி ஆகியோருக்கு நமது மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொள்வோம்.

முன்னாள் ஜனாதிபதி வி. வி. கிரி பாரத ரத்னா என்ற இணையற்ற சிறப்பினை அடைகிறார்.

ஸ்ரீ ஸேத்னா, ஸ்ரீ ராமண்ணா, ஆகிய அணு விஞ்ஞானிகளும் முன்னாள் நிதி அமைச்சர் ஸி.டி. தேஷ்முக் அவர்களும் ஜவாஹர்லால் நேரு பல்கலைக் கழகத் துணைவேந்தர் நாக் சௌத்திரி அவர்களும் ''பத்மவிபூஷண்'' பட்டங்கள் பெற்றுள்ளனர்.

மற்றும் ஏராளமான பேர்களுக்கு பத்மபூஷண், பத்மஸ்ரீ விருதுகள் குடியரசு தினத்தையொட்டி அறிவிக்கப்பட்டுள்ளன.

விருது பெற்றவர்களின் நற்பணிகள் பல்வேறு துறைகளில் நாடு நலன்பெறச் சிறக்கட்டும்!



வி. வி. கிரி

நாட்டின் வரவு செலவைச் சரிக்கட்டத் தெரியாத கட்சியை இக்குணை காலமாகப் பதவியில் வைத்திருந்ததன் பலனை மக்கள் நன்றாக அனுபவித்து வருகிறார்கள். ரூபாயின் மதிப்புக் குறைவும் விலைவாசிகளின் உயர்வும் அதை அவர்களுக்கு நன்றாக உணர்த்தி வருகின்றன. இந்நிலையில் பொருளாதாரத்தினை ஸ்திரப்படுத்த ஏற்ற மாற்றுக் கொள்கைகளை எதிர்க் கட்சிகள் இணைந்து அறிவிக்க வேண்டும் என்று மூச்சு முட்டிக் திணறிக்கொண்டிருக்கும் பாரத சமுதாயம் எதிர்பார்க்கிறது. விமோசனத்துக்கு இது ஒன்றே வழி.

## மற்றொரு பட்ஜெட் வருகிறது!

சென்ற ஆண்டு நிதி அமைச்சர் சாவன் பட்ஜெட்டில் 126 கோடிக்கு மேல் துண்டு விழாது என்று உறுதி அளித்தார். ஆனால் கணக்கெல்லாம் பிசகிப் போய் இன்றைய நிலையில் 750 கோடி பற்றாக்குறை ஏற்பட்டிருக்கிறது! இதற்கிடையில் அடுத்த பட்ஜெட்டும் இதோ வந்து கொண்டேயிருக்கிறது. இன்னும் என்னென்ன புது வரிகளோ, விபரீதங்களோ என்று ஒரே திகில்தான்.

## அழிக்கவும் செலவு ஐந்து லட்சம்

பழங்காலத்திய தஸ்தாவேஜுகள் எதையும் ஒழித்துவிட வேண்டாம் என்று இந்திய சரித்திர சாசன கமிஷன் எச்சரித்திருந்தும், தமிழக தொல்பொருள் காப்பகம் பல முக்கியமான தஸ்தாவேஜுகளை அழித்திருக்கிறது. இவற்றில் கட்டபொம்மன் பற்றிய பல சாசனங்களும் உண்டு. இவ்விதம் 86,208 தஸ்தாவேஜுகளைப் பொறுக்கி எடுத்து அழிக்க, காப்பகம் ஐந்து லட்சம் ரூபாய் செலவழித்திருக்கிறது! இவ்வாறு திடுக்கிட வைக்கும் தகவல்களைத் தந்துள்ளார் திரு பத்ரிநாத். இவற்றை எரிப்பதற்குப் பதில் ஏலம் போட்டிருந்தால் கூடப் பல லட்சம் ரூபாய் கிடைத்திருக்கும்! இக்காப்பகத்தின் கமிஷனராகச் சென்ற ஆண்டு பதவி ஏற்ற இவர், தக்க சமயத்தில் தலையிட்டுக் கிழக்கிந்தியக் கம்பெனி சம்பந்தப்பட்ட முப்பது லட்சம் தஸ்தாவேஜுகளை அழிவிலிருந்து காத்திருக்கிறார்.

ராஜாஜி சிந்தனை

### உலகத்தை அழிக்கக்கூடிய விபத்து!

தீ விபத்து என்றால் ஆண், பெண், குழந்தைகள் சிலர் மடிவார்கள். இதுபோன்ற விபத்துக்கள் நமக்குப் பழக்கம். ஆனால் அநேகமாக மனித சமுதாயம் முழுவதையுமே அழித்து விடக்கூடிய பின் விளைவை உண்டாக்கும் ஒரு விபத்தைப் பற்றி எண்ணிப் பாருங்கள். இதுமாதிரியான ஒரு விபத்தை மனிதன் இதுவரை சமாளிக்க நேர்ந்ததில்லை. ஆனால் இது இன்றைய சூழலில் நிகழக் கூடியதே.

ஒரு விமானி நிதானம் தவறுவதாலோ அல்லது ஒரு கருவி கோளாறாகப் போவதாலோ ஓர் அணுகுண்டு வெடிக்கக் கூடிய அபாயம் இன்று இருக்கிறது. அதைத் தொடர்ந்து சரமாரியாகப் பொழியும் உலக யுத்தம் மூளக் கூடும். தானியங்கு கருவிகள் அதிகரிக்க அதிகரிக்க இந்த அபாயமும் அதிகரிக்கிறது.

ஆயினும் அணுகுண்டுகள் தயாரிப்புக்கு முடிவுகட்ட இன்னமும் வல்லரசுகள் முன்வரவில்லை.

- சுயராஜ்யா, ஜூலை, 7, 1962




# சில துண்டுக் காகிதங்கள்... தூக்கியெறிய முடியாதவை.

காரணம்...அவற்றிலே காவியங்கள் புதைந்திருக்கும். அதோடு, இன்றைய காகிதப் பஞ்சத்தில், ஒவ்வொரு துண்டுக் காகிதமும் ஒரு கோடி பெறும்.

ஆந்திரப் பிரதேஷ் பேப்பர் மில்லில், நாங்கள் சீம் கணக்கில் காகிதம் தயார் செய்கிறோம்... எழுத, அச்சடிக்க, பொருட்களைப் பொதிந்து கட்ட என்று. ஆயின, அது எந்த மூலைக்கு? எங்கள் உற்பத்தியைப் பெருக்குவதற்காக, ஒரு குறுகிய கால திட்டம் வகுத்துக் கொண்டு, அசுர கதியில் அதிகப்படி வேலை செய்து வருகிறோம்.

ஓரளவு காகித பஞ்சத்தைக் குறைக்க இது உதவும்—மகிழ்ச்சியான செய்தியில்லையா இது? காகிதம் இல்லாத வாழ்வில் வேடிக்கையும் விளையாட்டும் ஏது?

ஆந்திரப் பிரதேஷ் பேப்பர்

ரெஜிஸ்டர்டு ஆபீஸ் & மில்ஸ்: ராஜமுந்திரி (ஆ.பி.) பம்பாய் ஆபீஸ்: ஸ்ரீனிவாஸ் ஹவுஸ், ஹஸாரிமால் ஸோமானி மார்க். ஹைதராபாத் ஆபீஸ்: 1-2-33/2, மதுபன், ககன்மஹால் ரோடு.

ஏகபோக விற்பனையாளர்: ப்ளேனிட் லிமிடெட், 24, லிங்கி செட்டித் தெரு, மதராஸ்-1.

# எனக்குக் கனகதாரை

6

## ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

என்னுடைய பராபர குரு ஜம்புகேசுவரத்தில் அகிலாண்டேசுவரி அம்பிகைக்குத் தாடங்கப் பிரதிஷ்டை செய்து விட்டுக் கும்பகோணத்துக்குத் திரும்பிக் கொண்டிருந்தார். அப்போது தஞ்சாவூரில் மகாராஷ்டிர ராஜாக்களின் ஆட்சி இருந்து வந்தது. சிவாஜி ஸ்தாபித்த சாம்ராஜ்யத்தில் பல பகுதிகளாகப் பிரிந்து அங்கங்கே ஏற்பட்ட ராஜ்யங்களில் இது ஒன்று. நான் சொல்கிற சமயத்தில் தஞ்சாவூரில் ஆண்டு கொண்டிருந்த மராட்டி ராஜாவின் பேரும் சிவாஜிதான். இந்த சிவாஜிக்கு ஆசார்யாளை வரவேற்று உபசாரம் செய்ய வேண்டும் என்று நிரம்ப ஆசையாக இருந்தது. திரு ஆனைக்காவிலிருந்து அவர் திரும்புகிறபோது வழியில் ஆசார்யாளையும், மடத்து வண்டிகள் எல்லாவற்றையும் அப்படியே திருப்பித் 'தஞ்சாவூருக்கு வரச் செய்தார். தஞ்சாவூரில் ஆசார்யாளுக்குக் கனகாபிஷேகமும் செய்தார் சிவாஜி மகாராஜா. இப்போது இந்த ஜனநாயகத்தில் நீங்கள் எனக்குக் கனகாபிஷேகம் செய்கிறபோது, அப்போது ஒரு மகாராஜா இந்தப் பீடத்து பூர்வ ஆசார்யாள் ஒருத்தருக்குச் செய்த கனகாபிஷேகத்தைப் பற்றிச் சொல்கிறேன். அந்தக் கனகாபிஷேகத்தையும் இந்தக் கனகாபிஷேகத்தையும் இணைக்கிறது இதோ நான் மேலே போட்டுக் கொண்டிருக்கிற இந்தச் சாதரா (பொன்னுடை). அப்போது கனகாபிஷேகம் செய்த சமயத்தில் சிவாஜி மகாராஜா ஆசார்யாளுக்குச் சமர்ப்பித்த சாதராதான் இது!

இது மடத்திலே ஒரு பெட்டியிலே பத்திரமாகக் காப்பாற்றப்பட்டு வருகிறது. இப்போது இந்தக் கொண்டாட்டம் நடத்துகிறபோது, அதை நான் தரித்துக் கொள்வதே எனக்கு உண்மையான கனகாபிஷேகம் — பராபர குருவின் அநுக்கிரகத்தால் என்னைப் போர்த்திக்கொள்வதே கனகாபிஷேகம் — என்று தோன்றிற்று. அதனால் அதை எடுத்து வரச் சொல்லி, மேலே போட்டுக் கொண்டிருக்கிறேன். ரொம்பப் பழசு. நான் கொஞ்சம் அப்படி இப்படி நகர்ந்தால்கூட இதில் இருக்கிற ஜரிகை பொடிப் பொடியாக உதிருகிறது. நல்ல தங்க ஜரிகை. இப்போது நான் இதை எடுக்கிறபோது இந்தத் தங்கத் தூள்கள் உங்கள் மேலெல்லாம் விழுகிறது. இதனால் உங்கள் எல்லோருக்கும் நான் கனகாபிஷேகம் பண்ணுகிறேன். இந்த ஒரு சாதரா இத்தனை பேருக்குக் கனகாபிஷேகம் பண்ணிவிட்டது. இப்போது குரு பிரஸாதத்தை நினைக்கிறோம் அல்லவா? அந்த நினைப்பே நம் அத்தனை பேருடைய மனசுகளுக்கும் பொன் மழையாக இருக்கிறது.

எனக்கு ஏக விலையில் பவுன்களை வாங்கிக் கொண்டு வந்து நீங்கள் அபிஷேகம் பண்ண வேண்டும் என்பதே இல்லை. உங்கள் எல்லாருடைய அன்புவர்ஷமே எனக்குக் கனகதாரை. இந்தத் தலைமுறையில் இருக்கிற அன்பர்களின் இந்தக் கனகாபிஷேகத்தோடு, முன்னே கனகாபிஷேகம் பெற்ற ஸ்ரீ பராபர குருவின் கிருபை, அவருக்கு முன்னே கனகதாரையைப் பொழிய வைத்த ஸ்ரீ ஆதி ஆசார்யாளின் கிருபை, அதற்கும் முந்தி இந்தத் தொண்டை மண்டலத்தில் ஸ்வர்ண விருஷ்டி செய்த ஜகதம்பிகை ஸ்ரீ காமாக்ஷியின் கிருபை எல்லாம் சேர்ந்து எனக்கு ரொம்பப் பெரிய கனகாபிஷேகமாகி இருக்கிறது.

நீங்கள் இத்தனை பேர் அம்பாள், ஆதி ஆசார்யாள் பூர்வ ஆசார்யாள் ஆகியோரை ஸ்மரிக்கும்படியான புண்ணியத்தை இந்தக் கனகாபிஷேகம் உண்டாக்கியதுதான் இதற்கு விசேஷம். ஜீவராசிகள் எல்லாரும் நன்றாக இருக்க வேண்டும், க்ஷேமமாக இருக்க வேண்டும் என்று அம்பாள் எண்ணிப் பொன் மழை பொழிந்ததையும், தரித்திரப் பிராமணனின் கஷ்டம் தீர வேண்டும் என்ற கருணையால் ஆசார்யாள் கனகதாரை பொழிந்ததையும் நினைக்கிறபோது ஒவ்வொருத்தருக்கும் இந்த ஜீவ தயை, இரக்கம் மனசில் தோன்றுகிறது. என்னைக் காரணமாக வைத்துச் செய்கிற ஒரு காரியத்தினால் இப்படி எல்லோருக்கும் லோகம் முழுதும் நன்றாயிருக்க வேண்டும் என்ற நினைப்பு வந்தது ரொம்பவும் சந்தோஷமாயிருக்கிறது. நமக்குச் சதா காலமும் இருக்க வேண்டிய நினைப்பு இதுதான்: சமஸ்த ஜனங்களும் பஞ்சம், நோய், நொடி இல்லாமல் வாழ வேண்டும். பாபம் இல்லாமல் வாழ்க்கை நடத்தினால்தான் இப்படிப்பட்ட வாழ்வு கிடைக்கும்; நல்லறிவு பெற்று வாழ்ந்தால்தான் சம்பத்துக்களும் கிடைக்கும்; அந்த நல்லறிவை, மேதையைத் தரவே, அம்பாள் இருக்கிறாள்; ஆசார்யாள் இருக்கிறார். இந்தக் கனகாபிஷேகம் பிரபஞ்சத்தில் உள்ள சகல ஜீவராசிகளும் செழிக்கும்படி செய்யும் பொன் மாரி ஆக வேண்டும் என்று அம்பிகையையும், குரு மூர்த்திகளையும் பிரார்த்திக்கிறேன்; லோகத்தில் உள்ள கஷ்டமெல்லாம் நீங்கி எல்லாரும் சௌக்கியமாக இருக்கப் பிரார்த்திக்கிறேன்.



## நளினம் மிக்க நாகரிகம்

இன்றைய இந்தியாவிலே எதற்கும் அரசாங்கக் கட்டுப்பாடு என்ற சூழ்நிலையில் எந்தவிதக் கட்டுப்பாடும் தடங்கலும் இன்றி வளர்ந்து வரும் ஒரு விஷயம் ஃபாஷன்.

□ பாஷனாக டிரஸ் செய்து கொள்ள வேண்டியவை நவீன உடைகள் மட்டுமல்ல; நல்ல உடற்கட்டும் தேவை. அதோடு ஃபாஷனை விரும்பி ஏற்கும் மனப்பான்மையும் வேண்டும். எல்லோரும் செய்கிறார்களே என்று 'ரவிக்' அணிந்து கொண்டாள் ஒருத்தி. அப்புறம் யாராவது பார்த்துவிடப் போகிறார்களே என்று புடவையை இழுத்து இழுத்துப் போர்த்திக் கொண்டாள்!

□ தைரியமாக ஃபாஷனை ஏற்கும் மனப்பக்குவம் பெற்ற பின் அப்படி டிரஸ் செய்து வரும் சில இளம் பெண்கள் போற்றுதலுக்கு உள்ளாவார்களே ஒழிய, பரிகாசத்துக்கு உள்ளாக மாட்டார்கள். அவர்களது துணிச்சலும் தைரியமுமே பிறரை அவளிடம் மரியாதையுடன் நடந்து கொள்ளச் செய்யும். ஆனால் தோற்றத்திலோ, நடை பாவனைகளிலோ சிறிதளவு விரசம் விகசிக்கும்படி நடந்து கொண்டாலும் போச்சு. அவர்கள் கௌரவத்தைக் காத்துக் கொள்ள முடியாது. எனவே ஃபாஷனாக இருக்க விரும்புகிறவர்கள்



எச்சரிக்கையாகவும் இருப்பது அவசியம்.

☐ ஃபாஷன் பரேட் எனப்படும் உடை அலங்காரப் போட்டிகளில் அர்த்தமற்ற, அழகற்ற பல டிஸைன்களில் உடை அணிந்து இளம் பெண்கள் நடந்து வருவதைக் கண்டு நான் வருத்தப்பட்டிருக்கிறேன்.

''மிகவும் அசௌகரியமான இந்த உடை அணிந்து சாலையில் நடப்பீர்களா?'' என்று கேட்டதற்கு, ''சே, சே! இது பாஷன் பரேடுக்கு மட்டும்தான். எப்படி இதை அணிந்து வெளியே வருவது?'' என்றாள் ஒரு மங்கை!

☐ அழகு ரசிப்பதற்கே என்ற கட்சியைச் சேர்ந்தவன் நான். 'கருணை என்பது அதை வழங்குபவனுக்கும் பெறுபவருக்கும் ஒருங்கே மகிழ்ச்சியைத் தருகிறது' என்றார் ஷேக்ஸ்பியர். அழகுணர்ச்சியும் அப்படிப்பட்டதுதான். அழகுணர்ச்சி என்ற வரம்புக்குள் அடங்கிய ஃபாஷன் எப்போதும் வரவேற்கத் தக்கதே.

படங்களில் காணப்படுபவர்: **குமாரி சரளா**

புகைப்படங்கள்: கட்டுரை — **உத்தரா**











D.C.G.49 TM (R)

## கால்கேட் டெண்டல் க்ரீமின் மூலம் வாய் துர்நாற்றத்தைத் தடுத்திடுங்கள்... நாள்முழுவதும் பற்சிதைவை எதிர்த்திடுங்கள்!

காலகேட் 10க்கு 7 பேர்களில் வாய் துர்நாற்றத்தை உடனடியாக அகற்றுகிறது என்றும், உணவு உட்கொண்டவுடன் காலகேட் முறையில் பற்களைத் துலக்குவதால், இதுவரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பேரளவில் ஏராளமானவர்களுக்கு பற்சிதைவு தடுக்கப் படுகிறது என்றும் விஞ்ஞான சோதனைகள் நிரூபித்துள்ளன. ஏனெனில், ஒரே தேய்ப்பில் வாய் துர்நாற்றத்தையும், பற்சிதைவையும் விளைவிக்கும் கிருமிகளை 85 சதவீதம் வரை, காலகேட் டெண்டல் க்ரீம் அகற்றி விடுகிறது.
அதன் விந்தைமிக்க பெப்பர்மிண்ட் சுவையே தனி—காலகேட் டெண்டல் க்ரீம் கொண்டு குழந்தைகள் தவறாமல் பல்துலக்க விரும்புவதில் வியப்பென்ன!
தூய்மையான இனிய மூச்சுடனே, வெண்மையான பற்களையும் பெற்றிடவே...

**உலகிலேயே அதிக மக்கள் மற்றெந்த பற்பசையையும் விட, காலகேட் பற்பசையையே வாங்குகிறார்கள்!**

வெண்மையான பற்களையும் ஆரோக்கியமான ஈறுகளையும் தூய்மையான இனிய மூச்சையும் பெற்றிடவே **காலகேட் டூத் பிரஷ்களை** உபயோகியுங்கள்! உங்கள் குடும்பத்தில் ஒவ்வொருவருக்கும் ஏற்றவாறு அமைய—16 ரகங்கள்.

[சென்னை நகரில் ஆண்டுக்கு ஏறக்குறைய எண்ணூறு பேர்கள் விபசாரத் தடைச் சட்டத்தின் கீழ் கைது செய்யப்படுகிறார்கள். இவர்களுள் விபசாரத்தைத் தொழிலாகக் கொண்ட மகளிர் 500 முதல் 600 பேராகும். மீதிப்பேர் விபசாரத் தரகர்களும் விபசார விடுதிகள் நடத்துவோருமாவர்.]




'இந்த இப் பிறவிக்கு இரு மாதரை என் சிந்தையாலும் தொடேன்' என்று கம்பன் வர்ணித்த இராமனைத் தெய்வமாகக் கொண்டாடும் இப்புண்ணிய பூமிக்கு விபசாரத் தொழில் ஒரு மாபெரும் களங்கமே!

இதனால் சமுதாயத்துக்கு விளையும் தீங்குகளையும் இதனை ஒழிப்பதற்கான வழிமுறைகளையும் கேட்டறியும் பொருட்டு 'அபய நிலையம்' (மயிலை) நிருவாகி டாக்டர் வி. எஸ். ரிஷி அவர்களைக் காணச் சென்றேன். வாழ்க்கையில் தவறிய பெண்களுக்கு மறு வாழ்வளித்து உதவும் மகத்தான பணியில் நீண்ட காலமாகத் தொண்டாற்றி வரும் டாக்டர் ரிஷி கூறினார்:

''எந்தப் பெண்ணுமே விபசாரியாகவே பிறந்து விடுவதில்லை. சந்தர்ப்பம், சூழ்நிலை காரணமாகவே இந்தத் தொழிலில் ஈடுபடுகிறார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.''

''காரணங்களைச் சற்று விளக்கமாகவே கூறுங்களேன்!''

''முக்கியமான விஷயம் குடும்பச் சூழல் சரியானபடி அமைய வேண்டும். 'அப்படி இருக்க வேண்டும், இப்படி நடந்து கொள்ள வேண்டும்' என்றெல்லாம் இளைஞர்களுக்கு உபதேசம் செய்வது பலனளிக்காது. பெரியவர்கள் எந்த அளவுக்கு ஒழுக்கத்தையும், கட்டுப்பாட்டையும் மேற்கொள்கிறார்களோ, அதைப் பார்த்துக் குடும்பத்தின் இளைய தலைமுறையினர் நடந்து கொள்வார்கள். பெற்றோர்கள் பலர் தங்கள் குழந்தைகளின் எதிரிலேயே கண்ணியக் குறைவாக நடந்து கொள்கின்றனர். இது விபரீத விளைவுகளைத் தோற்றுவிக்கிறது.

''குழந்தைகளை வீட்டிலே விட்டு விட்டுக் கணவனும் மனைவியும் உல்லாசமாக நாடகம், சினிமா என்றெல்லாம் வெளியே போவது குழந்தைகளின் மனத்தில் ஏக்கத்தைத் தோற்றுவிக்கும். வயது வந்த பெண்ணைத் தனியே வீட்டிலே விட்டுவிட்டுப் பெற்றோர் உல்லாசமாக ஊர் சுற்றினால், 'நாமும் சினிமாவுக்குப் போனால் என்ன?' என்ற உணர்வு அந்தப் பெண்ணுக்கு ஏற்படும் அல்லவா? கையில் பணம் இல்லாவிட்டால், பெண் தவறான வழிகளைக் கடைப்பிடிக்கத் தொடங்குகிறாள்.

''பருவமடைந்த பெண் இருக்கும்போது, தாயார் மிகவும் கவர்ச்சியாக உடுத்துவது சரியல்ல. அழகாக 'டிரஸ்' செய்து கொள்வதில் தவறில்லை. அழகு வேறு, கவர்ச்சி வேறு. தாயாரின் அலங்காரத்தில் உள்ள மிகுதியான கவர்ச்சி, பெண்ணின் சபலத்துக்குத் தூண்டுகோலாக அமைகிறது.



திரு வி. எஸ். ரிஷி

''இன்னொரு முக்கிய காரணம், வரதட்சிணைக் கொடுமை. ஆயிரக்கணக்கில் வரதட்சிணை கொடுத்துக் கல்யாணச் செலவும் செய்ய வழியின்றிப் பெண்களைக் குறிப்பிட்ட வயதுக்கு மேல் வீட்டோடு வைத்துக் கொண்டிருப்பதும் ஒரு காரணம். மற்றொன்று, பெண் வேலைக்குப் போய்ச் சம்பாதித்துக் கொண்டு வரும் பணத்தில் பெற்றோர்கள் சுக வாழ்க்கை மேற்கொள்வது. பெண் எப்படிச் சம்பாதிக்கிறாள் என்று கூடக் கவலைப்படாமல், இருக்கிறார்கள் சிலர். இன்னும்

சிலர் பெண் தவறான வழிகளில் சம்பாதிப்பதை அறிந்தும் அதைக் கண்டிக்காமலிருந்து விடுகின்றனர். ஏன், தங்கள் பெண்களையே இதில் ஈடுபடுத்திப் பிழைக்கும் பெற்றோர்களும் இருக்கிறார்கள்!''

கல்லூரியில் படித்துப் பட்டம் பெற்ற பிறகு பெண்கள் பலர் வேலை தேடி அலைகிறார்கள். வேலை வாய்ப்புக்கள் மிகவும் குறைவாக உள்ளபடியால் அவர்களுக்குப் பல சோதனைகள், கஷ்டங்கள் ஏற்படுகின்றன. 'எம்ப்ளாய்மெண்ட் எக்ஸ்சேஞ்ச்' அலுவலகத்தில் மனுப் போட வரும் அழகிய பெண்களை ஆசை காட்டி அழைத்துச் சென்று அவர்களை விபசாரத்தில் ஈடுபடுத்தும் தரகர்கள் உள்ளனர்!

''சினிமா மோகத்தைப் பற்றிக் கூறவே வேண்டியதில்லை! நடிகையாக வேண்டும் என்ற ஆர்வத்துடன் வீடு வாசலை விட்டு ஓடி வரும் பெண்கள் பலர் விபசார விடுதிகளுக்கு வந்து சேருகின்றனர். சினிமாவில் உள்ள ஆபாசக் காட்சிகளைவிடச் சுவரொட்டிகள் மிக்க ஆபாசமாக உள்ளன. திரைப்படக் காட்சி ஒரு வினாடியில் நூற்றில் ஒரு பங்கு நேரமே கண்ணில் பட்டு மறைந்துவிடுகிறது! சுவரொட்டி விஷயம் அப்படியில்லை. நீண்ட நேரம் நின்று வெறிக்கப் பார்க்கிறார்கள்!

''மேலை நாட்டு நாகரிகத்தின் ஊடுருவல் காரணமாகக் கல்லூரி மாணவ — மாணவியர் பலர் 'பாய் ஃப்ரண்ட்' 'கேர்ல் ஃப்ரண்ட்' என்று சொல்லி நெருங்கிப் பழகுகின்றனர். கூச்சம் மறைந்துவிடுகிறது. பின்னர் கேட்பானேன்? இப்படி விளையாட்டாக ஏற்படும் பழக்கம் சில பெண்களை விபசார விடுதிகளில் கொண்டு போய்ச் சேர்த்துவிடுகிறது!''

''விபசாரத் தடைச் சட்டம் இருக்கிறது. போலீசார் இச்சட்டத்தின் கீழ் நடவடிக்கை எடுக்கிறார்கள். இது தவிர, விபசாரத்தை ஒழிக்க என்ன வழிகளைத் தனிப்பட்டவர்கள், நிறுவனங்கள் கையாளலாம்? உங்கள் மேற்பார்வையில் இயங்கி வரும் 'அபய நிலையம்' என்ன பணிகளை ஆற்றி வருகிறது?''

''கல்லூரிகளில் ஆசிரியர் — மாணவர் தொடர்பு, ஆசிரியர்—பெற்றோர் தொடர்பு, பெற்றோர் — குழந்தைகள் தொடர்பு இன்னும் நெருக்கமாக இருக்க வேண்டும். மாணவ—மாணவியரின் பிரச்னைகள் குறித்து ஆசிரியர்கள் பெற்றோர்களை அடிக்கடி சந்தித்து விவாதிக்க வேண்டும். இன்றைய மாணவர்கள் திறமை மிக்கவர்கள், புத்திகூர்மை உள்ளவர்கள் என்பதில் சந்தேகமேயில்லை. கல்லூரிக்குச் சம்பளம் கட்டிவிட்டு, குழந்தைகளின் உணவு, உடை முதலிய தேவைகளைக் கவனிப்பதோடு பெற்றோரின் கடமை முடிந்து விடுவதில்லை. 'என் சிநேகிதியின் வீட்டுக்குப் போய் விட்டு வருகிறேன்' என்று பெற்றோரிடம் சொல்லி விட்டுப் போகும் கல்லூரிப் பெண், சிநேகிதியை ஒரு வியாஜமாக வைத்துக் கொண்டு அவளுடைய அண்ணனைப் பார்க்கப் போகிறதும் உண்டு! பெற்றோர் விழிப்புடன் இருப்பது நல்லதல்லவா?

''ஒரு தடவை வாழ்க்கையில் தவறு இழைத்து விட்ட பெண்ணை அவளுடைய பெற்றோர்கள் உதாசீனம் செய்வதோ புறக்கணிப்பதோ கூடாது. சமூகமும் அனுதாபத்துடன் நடந்து கொள்ள வேண்டும். 'அபய நிலையம்' இதைத்தான் செய்து வருகிறது. தவறிவிட்ட பெண்களுக்கு இது தற்காலிகமான தங்குமிடம். இங்கு வந்து சேரும் பெண்களுக்கு மறுவாழ்வு அளிக்க எங்களால் இயன்ற அளவு பாடுபடுகிறோம்.''

''மறுவாழ்வு என்றால் எத்தகைய மறுவாழ்வு?''

''அவர்கள் மீண்டும் விபசாரத் தொழிலை நாடாமல் அவர்களைப் பாதுகாக்கும் பணியைத்தான் குறிப்பிடுகிறேன். படித்த பெண்ணாக இருந்தால் வேலை வாய்ப்புக்களைத் தேடித் தருகிறோம். இங்குள்ள பெண்களை மணம் செய்து கொள்ளச் சிலர் முன்வருகிறார்கள். இருவரும் ஒருவரையொருவர் விரும்பி மணம் செய்து கொள்ளச் சம்மதித்தால் ரிஜிஸ்தர் விவாகம் செய்விக்கிறோம். இதுவரை இவ்விதம் 95 பெண்களுக்குத் திருமணங்கள் நடத்தியிருக்கிறோம். அவர்கள் மகிழ்ச்சியோடு வாழ்க்கை நடத்தி வருகிறார்கள். வீட்டை விட்டு வெளியேறிய பெண்கள் சிலர் மீண்டும் பெற்றோர்களுடன் சேர்ந்து வாழ இசைவதில்லை. எந்த முகத்தோடு பெற்றோர்களைப் பார்ப்பது என்ற வெட்கம் ஒருபுறம்; வாய்க்கு வாய் அவர்கள் தன்னுடைய தவற்றைச் சுட்டிக் காட்டி இடித்துரைப்பார்களே என்ற பயம் ஒருபுறம். அத்தகைய பெண்களுக்கு இந்தப் புகலிடம் இல்லாவிட்டால் இங்கிருந்து ஒரு பர்லாங் தூரத்திலுள்ள கடலைத்தான் அடைக்கலமாக நாடிச் செல்வார்கள்! அல்லது விபசாரத்தையே தொழிலாகக் கொண்டு வாழ்க்கை நடத்தத் துணிவார்கள், இல்லையா?''

''இன்றுள்ள சூழ்நிலையில் இதற்கு என்ன பரிகாரம்?''

திரு ரிஷி பின்வரும் பதிலைத் தந்தார்: ''மாணவ — மாணவியர்க்குப் பாலுணர்வுக் கல்வி அளிப்பது மிகவும் உகந்தது. பாலுணர்வுக் கல்வி என்றால் உடலுறவு பற்றிய தகவல்கள் மட்டுமே என்று பலர் தவறாகப் புரிந்து கொள்கின்றனர். இந்திய சமூக சுகாதாரச் சங்கத்தின் தமிழ்நாடு கிளையின் உதவியால் இதுவரை சுமார் நாலாயிரம் மாணவ—மாணவியர் இத்தகு கல்வியால் பயனடைந்துள்ளனர். கல்லூரிகளும் பிற நிறுவனங்களும் அழைத்தால் எந்தச் செலவுமின்றி அங்கு போய்க் கூட்டங்களில் சொற்பொழிவாற்ற இதற்கெனப் பயிற்சி பெற்றவர்கள் உள்ளனர். கூடாத சேர்க்கையால் பரவும் பயங்கர வியாதிகளைப்பற்றி மக்களுக்கு அறிவு புகட்டுவதும் இச் சங்கத்தின் ஒரு முக்கிய பணி.''

விபசாரிகளை நாடிச் செல்லும் ஆண்களும் தர்ம நியாயப்படி குற்றவாளிகளேயானாலும் அவர்களுக்குச் சட்டபூர்வமாகத் தண்டனை தர இயலாதிருப்பதையும் போலீஸாரே பல தருணங்களில் ஓர் ஆணை விடுதிக்கு அனுப்பிச் சாட்சியம் தயாரிப்பதையும் திரு ரிஷி விளக்கினார்.

பெண் குலத்தை இழிவுபடுத்தும் வகையில் ஒரு விஷ வட்டமாக விளங்கும் இந்தத் தொழிலின் கொடுமை பற்றி எண்ணி விசனித்தவாறே திரு ரிஷியிடம் விடை பெற்றேன்.

—பாணன்

# சிவகாமியின் சபதம்

அமரர் கல்கி



## நாற்பத்து மூன்றாம் அத்தியாயம்
## புலிகேசியின் வாக்குறுதி

புலிகேசி சக்கரவர்த்தி முகத்தில் புன்னகையுடன், ''அடிகளே! தங்களுடைய பிக்ஷு விரதத்துக்கு நாட்டியப் பெண் சிவகாமியினால் பங்கம் நேராமல் இருக்கலாம். ஆனால், நம்முடைய தென்னாட்டுப் படையெடுப்புக்கு அந்தப் பெண் தெய்வத்தினால் பங்கம் நேர்ந்து விட்டது!'' என்றார்.

பிக்ஷு வியப்பும் கோபமும் கலந்த குரலில், ''அது எப்படி? படையெடுப்புக்கும் சிவகாமிக்கும் என்ன சம்பந்தம்? மகேந்திர பல்லவனுடைய சூழ்ச்சித் திறமையினால் அல்லவா உத்தேசம் நிறைவேறவில்லை'' என்று கேட்டார்.





''அடிகளே! மகேந்திரனுடைய சூழ்ச்சித் திறனுக்குத் தங்களுடைய சூழ்ச்சித் திறன் குறைவானதா? யுத்தரங்கத்தில் நாம் சில சமயம் தோல்வி அடைந்திருக்கிறோம். ஆனால், அரசியல் தந்திரத்தில் இதற்கு முன்னால் எப்போதாவது நாம் தோல்வி அடைந்ததுண்டா? சிவகாமியிடமோ, அவளை ஆட்கொண்ட கலைத் தெய்வத்திடமோ தங்களுக்கு மோகம் ஏற்பட்டிராவிட்டால், மகேந்திர பல்லவன் தங்களைச் சிறைப் பிடித்திருக்க முடியுமா? தங்களுடைய திருவுள்ளத்தைப் பரிசோதனை செய்து உண்மையைச் சொல்லுங்கள்!''

இவ்விதம் புலிகேசி கூறியபோது பிக்ஷுவின் முகத்தில் தோன்றிய கோபக் குறி மறைந்து, வெட்கம் கலந்த பிடிவாதம் காணப்பட்டது.

தரையை நோக்கித் தலையைக் குனிந்தவண்ணம், ''சக்கரவர்த்தி! இந்த அறிவிழந்த பிக்ஷுவை மன்னித்து விடுங்கள்! சாம்ராஜ்யத்தின் தொண்டுக்கு நான் இனித் தகுதியில்லாதவன். இத்தனை காலமாய் நான் செய்திருக்கும் சேவையை முன்னிட்டு மன்னித்து விடுதலை கொடுங்கள்'' என்றார் பிக்ஷு.

''அண்ணா! இது என்ன விளையாட்டு?''

''இல்லை, தம்பி! விளையாட்டு இல்லை. உண்மையாகத்தான் சொல்கிறேன். எனக்கு விடை கொடு, நான் போகிறேன்.''

''எங்கே போவதாக உத்தேசம்?''

''எங்கேயாவது மனிதர்களின் கண் காணாத இடத்துக்குப் போகிறேன். அஜந்தாவைப் போல் இன்னொரு மலைப் பிரதேசத்தைக் கண்டு பிடித்து அதற்குள்ளே, உள்ளே, உள்ளே, யாரும்

எளிதில் வர முடியாத இடத்துக்குப் போய்விடுகிறேன். அங்கே சிவகாமியை நடனம் ஆடச் சொல்லிப் பார்த்துக் கொண்டே என் மிகுதி ஆயுளைக் கழித்து விடுகிறேன்.''

''அண்ணா! அப்படித் தனியாகச் சிவகாமியை நீ கொண்டு போய் வைத்துக் கொண்டிருந்தால், அந்தப் பெண் நடனம் ஆடுவாளா?''

''கலைஞர்களின் இயல்பு உனக்குத் தெரியாது, தம்பி! பெரிய சாம்ராஜ்யத்தை ஆளும் சக்கரவர்த்தியின் அதிகாரத்தினால் சிவகாமியை ஆடச் சொல்ல முடியாது. ஆனால், நிற்க நிழலில்லாத இந்த ஏழைப் பிக்ஷுவினால் சிவகாமியை ஆடச் செய்ய முடியும்.''

''ஓஹோ!''

''ஆம், தம்பி! அதனாலேதான் நான் உன்னைப் போல் வேஷம் தரித்திருக்கும் வரையில் அவளை நடனம் ஆடச் சொல்லவில்லை.''

''அண்ணா! இந்தப் பைத்தியம் உனக்கு வேண்டாம். சிவகாமியைக் காஞ்சிக்கே திருப்பி அனுப்பிவிடுகிறேன். இல்லாவிட்டால், நம் தளபதிகளில் யாராவது ஒருவனுக்கு அவளைக் கல்யாணம் செய்து கொடுத்துவிடுவோம்.''

பிக்ஷுவின் கண்களில் கோபக் கனல் பறந்தது. ''தம்பி! சிவகாமியைப் பெண்டாளும் எண்ணத்துடன் அவள் அருகில் நெருங்குகிறவன் யமனுலகம் போக ஆயத்தமாயிருக்க வேண்டும்'' என்றார்.

''அண்ணா! மாமல்லன் யமனுலகம் போய் விட்டானா?'' என்று புலிகேசி பரிகாசக் குரலில் கேட்டார்.

''இல்லை. அந்த நிர்மூடன் அதைக் காட்டிலும் கொடிய தண்டனையை இந்த உலகிலேயே அனுபவிக்கப் போகிறான். கேள், தம்பி! மாமல்லனை இந்தக் கையினாலேயே கொன்றுவிடத் தீர்மானித்திருந்தேன். இரண்டு மூன்று தடவை சந்தர்ப்பங்களும் வாய்த்தன.



ஆனால், கடைசி நேரத்தில் என் மனத்தை மாற்றிக் கொண்டேன்.''

''ஆகா! நீ மட்டும் உன் மனத்தை மாற்றிக் கொள்ளாமல் மாமல்லனைக் கொன்றிருந்தால், பல்லவ இராஜ்யத்தில் இப்போது வராகக் கொடி பறந்து கொண்டிருக்கும். மகேந்திர பல்லவனும் மதுரைப் பாண்டியனும் நம் காலின் கீழ்க் கிடப்பார்கள்.''

''ஒருவேளை அப்படி ஆகியிருக்கலாம். ஆனால், சிவகாமியைத் தன்னுடைய சுகபோகப் பொருளாக்கிக் கொள்ள நினைத்த மாமல்லனுக்கு அது தக்க தண்டனையாயிராது.''

''இப்போது என்ன தண்டனை?''



''அவனுடைய ஆருயிர்க் காதலியைச் சளுக்கர் கொண்டு போன செய்தி வாழ்நாளெல்லாம் அவனுக்கு நரக வேதனை அளிக்கும். இரவு பகல் அவன் மனத்தை அரித்துக் கொண்டிருக்கும். இதைக் காட்டிலும் அவனுக்குத் தண்டனை வேறு கிடையாது.''

''நல்லது, அண்ணா! இப்போது என்ன சொல்கிறாய்?''

''இராஜரீக விவகாரங்களிலிருந்து அடியோடு விலகிக் கொள்வதாகச் சொல்கிறேன். இருபத்தைந்து வருஷங்கள் உனக்காகவும் சாம்ராஜ்யத்துக்காகவும் உழைத்தேன். இனி மேல் சில காலம் எனக்காக வாழ்கிறேன். தம்பி! எனக்கு விடை கொடு! எங்கேனும் ஏகாந்தமான பிரதேசத்தைத் தேடிச் செல்கிறேன்.''

''அண்ணா! இராஜ்ய விவகாரங்களிலிருந்து விலகிக் கொள். அதற்காகக் காடு மலை தேடிப் போக வேண்டாம். வாதாபியிலேயே ஒரு நல்ல மாளிகையைப் பார்த்து எடுத்துக் கொள். வேண்டுமானால் அதில் ஒரு நடன மண்டபமும் கட்டிக் கொள். சிவகாமி அதில் ஆனந்தமாய் நடனமாடட்டும் - நீ பார்த்துக் கொண்டே இரு.''

''தம்பி! மெய்யாகச் சொல்கிறாயா? இதெல்லாம் எனக்காக நீ செய்து தரப் போகிறாயா?''

''நிச்சயமாகச் செய்து தருகிறேன். ஆனால், அதற்கு ஒரு நிபந்தனை இருக்கிறது.....''

''நிபந்தனையா? என்னிடமா நிபந்தனை கேட்கிறாய், தம்பி!''

''நிபந்தனைதான்; ஆனால், உன்னிடம் நான் பிரார்த்தித்துக் கேட்டுக் கொள்ளும் நிபந்தனை; உன்னைத் தவிர யாரும் செய்ய முடியாத காரியம். எனக்கு இந்தக் கடைசி உதவியை நீ செய்து கொடு. அப்புறம் உன்னை நான் ஒன்றும் கேட்பதில்லை.''

''அது என்ன?''

''சற்று முன் சொன்னேனே, அதுதான். வேங்கியில் விஷ்ணுவர்த்தனன் படுகாயப்பட்டுக் கிடப்பதாகச் செய்தி வந்திருக்கிறது. நாடெல்லாம் கலகமும் குழப்பமுமாய் இருக்கிறதாம். நீ அங்கு உடனே போய் அவனைக் காப்பாற்ற வேண்டும். என்னைப்போல் விஷ்ணுவும் உன் உடன் பிறந்த சகோதரன்தானே?''

''உடன் பிறந்த சகோதரன்தான். ஆனால், அவனுக்கு என்னைக் கண்டால் பிடிப்பதே இல்லை! அவனிடமிருந்து நான் பாரவியைப் பிரித்து விரட்டிய குற்றத்தை அவன் மன்னிக்கவே இல்லை.....''

''அண்ணா! பாரவி கவியை ஏன் விஷ்ணுவிடமிருந்து நீ பிரித்தாய்? அதனால் எப்பேர்ப்பட்ட விபத்துக்கள் நேர்ந்தன?''

''எல்லாம் அவனுடைய நன்மைக்காகத்தான் செய்தேன். அவன் ஓயாமல் கவிதை படித்துக் கொண்டும் எழுதிக் கொண்டும் வீண் பொழுது போக்கிக் கொண்டிருந்தான்....''

புலிகேசி புன்னகை புரிந்தார். மனத்துக்குள், 'என் உடன் பிறந்தவர்களில் இரண்டு பேரில் ஒருவனுக்குக் கவிதைப் பைத்தியம்; இன்னொருவனுக்குக் கலைப் பைத்தியம். புத்தி மாறாட்டம் இல்லாதவன் நான் ஒருவன்தான். அன்று விஷ்ணுவைக் காப்பாற்றியது போல் இன்று பிக்ஷுவை நான் காப்பாற்றியாக வேண்டும்' என்று



ஒப்பற்ற வெள்ளைவெளேர்-
சலவைக்கே ஸூப்பர் ஸர்ஃப்...
ஒப்பற்ற வெள்ளைவெளேர்!
SUPER
Surf
washes whitest of all
அதி உன்னதமான துலக்கும் சக்தி படைத்தது ஸூப்பர் ஸர்ஃப். கண்மறைவான அழுக்கையும் அகற்றிவிடுகிறது. பிறர் பொறாமைப்படும் அளவுக்கு அதி உன்னதமான வெண்மை அளிக்கிறது உங்கள் துணிகளுக்கு; அதிசயமென்ன, இந்தியாவின் தலைசிறந்த ரகமாக விளங்குகிறது ஸூப்பர் ஸர்ஃப்!
இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.
லின்டாஸ்-SU-180-140 TM(R)



எண்ணிக் கொண்டார். பின்னர் கூறினார்:

"ஆம், அண்ணா! அவனுடைய நன்மைக்காகவே செய்தாய். உன்னுடைய விருப்பத்தின்படி நான்தான் பாரவியை நாட்டை விட்டுப் போகச் சொன்னேன். ஆனால், அதன் பலன் என்ன ஆயிற்று? பாரவி கங்கநாட்டுக்குப் போனான். அங்கிருந்து துர்விநீதனுடைய மகளைப் பற்றி வர்ணித்து எழுதி அவளை விஷ்ணுவுக்குக் கல்யாணம் செய்து வைத்தான். பிறகு காஞ்சி நகருக்குப் போனான். அங்கிருந்து காஞ்சி நகரைப் பற்றி வர்ணனைகள் அனுப்பிக் கொண்டிருந்தான். அதனால் காஞ்சி சுந்தரியின் மேல் எனக்கு மோகம் உண்டாயிற்று."

"அந்தப் பழைய கதைகளையெல்லாம் எதற்காகச் சொல்கிறாய்?"

"உனக்குப் பிடிக்காவிட்டால் சொல்லவில்லை. ஆனால், இந்தக் கடைசி உதவியை நீ எனக்குச் செய்துவிடு. அண்ணா! நாம்தான் காஞ்சியைக் கைப்பற்ற முடியாமல் திரும்புகிறோம். வேங்கியிலிருந்து விஷ்ணுவர்த்தனனும் தோல்வியடைந்து திரும்பினால் அதைக் காட்டிலும் நம்முடைய குலத்துக்கு அவமானம் வேண்டியதில்லை. இந்த ஒரே ஓர் உதவியை மட்டும் செய்துவிடு. உன்னுடன் நமது பாதிப் படையை அழைத்துக் கொண்டு போ!"

புத்தபிக்ஷு சற்று யோசித்துவிட்டு, "ஆகட்டும், தம்பி! ஆனால், எனக்கு நீ ஒரு வாக்குறுதி தரவேண்டும்!" என்றார்.

"சிவகாமியைப் பத்திரமாகப் பாதுகாக்க வேண்டும் என்பதுதானே? அப்படியே வாக்குறுதி தருகிறேன். இத்தனை காலமும் நீ எனக்குச் செய்திருக்கும் உதவிகளுக்கு இதுகூட நான் செய்ய வேண்டாமா? வாதாபியின் அழகான அரண்மனை ஒன்றில் அவளைப் பத்திரமாய் வைத்து நீ வரும் வரையில் பாதுகாத்து ஒப்புவிக்கிறேன்."

"தம்பி! சிவகாமி கலைத் தெய்வம்; அவளிடம் துராசையுடன் நெருங்குகிறவன் அதோகதி அடைவான்."

"அதை நான் மறக்கமாட்டேன். ஆனால், நடனக் கலையைப் பற்றி நீ சொல்லச் சொல்ல எனக்கே அதில் ஆசை உண்டாகிவிட்டது. சிவகாமியை நடனம் ஆடச் சொல்லி நான் பார்க்கலாமா?"

"அவள் ஆட மாட்டாள்."

"அவளாக இஷ்டப்பட்டு ஆடினால்?"

"எனக்கு ஆட்சேபமில்லை."

"மிகவும் சந்தோஷம்."

"தம்பி! நம்முடைய பாட்டனாருக்குச் சத்யாச்ரயர் என்று பட்டம் கொடுத்தார்கள். அதே பட்டப் பெயர் உனக்கும் கிடைத்திருக்கிறது. இந்த ஒரு விஷயத்திலாவது உன் பட்டப் பெயருக்குத் தகுந்தபடி நடந்து கொள்ள வேண்டும்."

"சத்தியமாகச் சிவகாமியைப் பத்திரமாய்ப் பாதுகாத்து உன்னிடம் ஒப்புவிக்கிறேன்."

இவ்விதம் புலிகேசிச் சக்கரவர்த்திக்கும் புத்த பிக்ஷுவுக்கும் நடந்த நீண்ட சம்பாஷணை முடிவடைந்தது.

அன்றிரவு இரண்டாவது ஜாமத்திலேதான் இருவரும் சிவகாமி அரைத்தூக்கமாய்ப் படுத்திருந்த இடத்துக்குச் சென்று நிலா வெளிச்சத்தில் நின்று அவளைப் பார்த்தார்கள். (தொடரும்)

---

★

"என் சம்பளத்தை உயர்த்தித் தரச் சொன்னது உண்மை தான். அதற்காக..."

★




THERE ARE ONLY TWO KINDS OF WOMEN-
THOSE WHO READ
femina
AND THOSE WHO DON'T
WHICH KIND ARE YOU?
If you are not already one among our 16 lakh readers*, do yourself a favour.....start ordering your copies of Femina today.
Twice every month, Femina will speak on issues that need to be talked about. We will take you from the metros to the suburbs, from the small towns to the villages, to show you the new Indian woman at work and in the home. We will bring you her ideas on health, politics, the economy, clothes, furniture, films and books—the whole business of living—right up to your doorstep. Maybe you will want to give Femina to your husband, your children, your friends. So that they can understand you better. Don't wait another day!
BUY YOUR COPY TODAY!!
* Source : ORG Survey
femina
INDIA'S FASTEST GROWING FORTNIGHTLY



## பயில்வான் பானு

இந்தியா முழுதும் குஸ்திகள் பல செய்து புகழ் பெற்றிருக்கும் பயில்வான் திருமதி ஜமீன் பானு திருச்சியில் வசிக்கிறார்.

தமது பதினாறுவது வயதில் குஸ்தி பழகத் தொடங்கிய இவரது ஆசிரியர் திரு. நந்தா.

குஸ்தி போடும்போது 'கோதாவில்' அணியும் உடை கைவைத்த பனியனும் அரைக்கால் நிக்கரும்தான்.

முப்பத்தைந்து வயதான இவர் சுமார் ஐந்தரை அடி உயரம், 160 பவுண்ட் எடை. ஜூடோ சண்டை, சிலம்பம், மடுவுச் சண்டை ஆகியவையும் இவருக்குத் தெரியும். 300 பவுண்ட் எடையை அனுயாசமாகத் தூக்குகிறார்.

குஸ்தி பயில்வானக இருந்தாலும் எல்லோருட னும் கலகலப்பாகச் சிரித்துக் கொண்டே பேசுவார். ஜமீன் பானுவுக்குக் குழந்தைகள் இல்லை.

சினிமாவுக்கோ, கடைத் தெருவுக்கோ செல்ல வேண்டுமென்றால் பஸ்ஸுக்காகக் காத்திருக்க மாட்டார், சைக்கிளிலேயே செல்வார். கார் டிரைவிங் கூடத் தெரியும்.

இவரது குஸ்தி செய்யும் திறமையை நேரில் பார்த்த கிங்காங், தாராசிங் போன்ற பெரிய பயில்வான்கள் இவரைப் பாராட்டியதுடன் பல பரிசுகளும் அளித் திருக்கிறார்கள்.

பொன்மலை பரிமளம்

## வரதட்சிணைக் கொடுமை

திருமணம் என்பது மணமக்களின் எதிர் கால நன்மையை நிர்ணயிக்கும் பெரிய காரி யம். அவ்வளவு முக்கியமான விஷயத்தில் (வரதட்சிணை என்னும்) தீய பழக்கம் வெளிப் படையாகப் புகுந்திருப்பதை வெளிப்படை யாகக் கண்ட பிறகும் கூட, கல்லூரி வரை சென்று கல்வி கற்ற பல இளைஞர்களும் பெண்களும் அதை எதிர்த்து நிற்க வல்லமை அற்றவர்களாவோ, விருப்பம் அற்றவர்களா கவோ இருப்பது ஆச்சரியமாக இருக்கிறது. தங்களை ஒருவரும் கல்யாணம் செய்து கொள்ளவில்லை என்பதற்காக, படித்த பெண்கள் ஏன் தற்கொலை செய்து கொள்ள வேண்டும்? நல்லொழுக்கம் என்ற எண்ணத் துக்கே அருவருப்பைக் கற்பிக்கும் ஒரு தீய பழக்கத்தை ஒரு சிறிதும் பரிவுகாட்டத் தகாத ஒரு தீமையை எதிர்த்து நிற்கத் துணிவு ஏற்படவில்லை என்றால், இந்தப் பெண்கள் கற்ற கல்வியினால் என்ன பயன்?

— காந்தி மகான்

## பெண்களே இப்படித்தானோ?

ஒரு பெண் என்னென்ன அறி வுரைகள் சொன்னாலும் கேட்டுக் கொள்ளுங்கள்; அதற்கு எதிர்மாறாக நீங்கள் செய்தால், நிச்சயம் நீங்கள் தான் அறிவாளி. -- தாமஸ்மூர்

தங்கத்தை விரும்பாத ஒரு பெண், வைரத்தை விரும்பாமல் இருப்பாள் என்று நான் நினைக்கவில்லை.

-- ராபர்ட்

ஓர் அழகிய பெண், கண்களுக்குச் சொர்க்கமாகத் திகழ்வாள்; உள்ளத் துக்கு நரகமாக இருப்பாள்.

--நிக்கோலோ சாம்போர்ட்

தூய்மையான பெண்கள், ஆண் களைவிட வலிமையுள்ளவர்கள். பெண்களுக்கு உண்மையான ஆபர ணம் அவளது தூய்மையான நடத் தையே. -காந்தி. நகலர்: முதன்

## சந்திர, சூரியர்!



இவர்கள் படித்த பெண்கள். உத்தியோகத்திலும் இருப்பவர்கள். ஆனாலும் கிராமியக் கலைகளான பொய்க்கால் குதிரை, காவடி ஆட்டம், கரக ஆட்டம் முதலியவற்றையும் பெருமிதத்துடன் கற்றுக் கொண்டு ஆடுகிறார்கள்.

சகோதரிகள் பள்ளி இறுதியாண்டு தேர்வு பெற்று, பெங்களூரிலுள்ள எச். எம். டி. தொழிற்சாலையில் கடிகார உற்பத்திப் பிரிவில் பணி புரிகின்றனர்.

ஊர்வலமோ, திருவிழாவோ இருந்தால் சந்திரகலாவும் சூரியகலாவும் கரகம், புரவியாட் டத்தில் சளைக்காமல் தங்கள் திறமையைக் காட்டிப் பாராட்டைப் பெற்று வருகிறார்கள்.

சகோதரிகள், தங்கள் தந்தையிடமே இக்கலை களைக் கற்றுத் தேர்ந்தார்கள்.

..அவர் யார் தெரியுமா?

..தமிழ்நாடு இயல் இசை நாடக மன்றத்தாரால் 'கலைமாமணி' விருது அளித்துப் பாராட்டப் பெற்ற புகழ்மிக்க புரவி நாட்டியக் கலைஞர் திரு. டி. சுந்தர மூர்த்திதான்!

-ஏ. சுவாமிநாதன்

[1961-ஆம் ஆண்டில் திரையுலகில் பிரவேசித்த திருமதி கே. ஆர். விஜயா பதினைந்து ஆண்டுகளில் 'கற்பகத்தில்' தொடங்கி 'நத்தையில் முத்து' வரை நூற்றுக்கும் மேற்பட்ட படங்களில் நடித்திருக்கிறார்.

தமிழ், தெலுங்கு, மலையாளம் ஆகிய மும்மொழிப் படங்களிலும் முன்னணி நட்சத்திரங்களோடு நடித்தவர்.

வாழ்க்கையில் பல துன்பங்களைக் கடந்து வளமான வாழ்வைப் பெற்றிருப்பவர். குணசித்திர நடிகை என்ற நிலையான புகழ் பெற்றுள்ள திருமதி கே. ஆர். விஜயா "கல்கி" மாதர் மலருக்காக விசேஷ பேட்டி அளித்திருக்கிறார்.]

கேள்வி: கடந்த பதினைந்து வருடங்களில் சினிமா உலகில் என்ன விசேஷமான மாறுதல்கள் ஏற்பட்டிருக்கின்றன?

பதில்: ஒரு தலைமுறைக்கும், அடுத்த தலைமுறைக்கும், எல்லாத் துறைகளிலும் மாறுதல் ஏற்பட்டிருக்கும்.

அப்படித்தான் சினிமா உலகத்திலும் பல மாறுதல்கள் ஏற்பட்டிருக்கின்றன.

புது முகங்களாக, நடிக — நடிகையர், கலைஞர்கள், எழுத்தாளர்கள், டைரக்டர்கள் இடம் பெற்றிருக்கிறார்கள்.

படங்களிலும் வித்தியாசம். அப்போது வெளியான படங்களில் நல்ல கதையம்சம் இருந்தது. இப்போது குறைந்திருக்கிறது.

கேள்வி: ரசிகர்களிடம் முன்பு இருந்த ரசனைக்கும் இன்று உள்ள ரசனைக்கும் ஏதேனும் வித்தியாசம் ஏற்பட்டிருப்பதாக நினைக்கிறீர்களா?

பதில்: நவநாகரிகம் வேகத்தில் பரவிக் கொண்டிருக்கிறது. அதை நடை, உடை, பேச்சு, அலங்காரம் முதலிய [illegible]

அருகுள்ள படம்:
நத்தையில் முத்து





விவசாயி படத்தில்.....

கிறோம். இளம் பெண்கள் சேலை அணிவதைக் குறைத்து, பைஜாமா, லுங்கி, மினி ஸ்கர்ட், டைட்ஸ் என்றெல்லாம் அணிந்து பெரிய நகரங்களில் வலைய வருகிறார்கள்.

சினிமா ரசிகர்கள் — இன்றைய இளைய தலைமுறையினர் — 'கிளப் டான்ஸ்' காபரே காட்சிகளை ரசிப்பதால்தான், ஒவ்வொரு படத்திலும் இடம் பெறும் நிலை ஏற்பட்டிருக்கிறது.

கற்பழிப்பும், பலாத்காரமும் கொண்ட கதைகள் பெருகி வருகின்றன.

இந்த நிலை வளர்வது விரும்பத் தக்கது அல்ல என நான் கருதுகிறேன்.

கேள்வி: முன்னர் கதாநாயகிகளாக நடித்த பத்மினி, சாவித்திரி, சௌகார் ஜானகி போன்றவர்கள் தங்கள் நடிப்பின் சிறப்பால் நட்சத்திர நிலையை அடைந்தார்கள். இந்த நட்சத்திர வரிசையில் நீங்களும் இருக்கிறீர்கள். ஆனால் இப்போது 'கவர்ச்சி' ஒன்றை மட்டும் கொண்டு சிலர் கதாநாயகி இடத்தை அடைந்துள்ளார்கள்.

இந்த நிலை நீடிக்குமா?

பதில்: இந்த நிலை நீடிக்குமா என்பதை என்னால் நிச்சயமாகச் சொல்ல முடியாது. ஆனால் கவர்ச்சி ஒன்றினால் மட்டும் ஒரு நடிகை, நிரந்தர நட்சத்திரமாக இருக்க முடியாது என்பதைக் கூறுவேன். கவர்ச்சி நடன, நடிகை என்று பெயர் வாங்கி விட்டால், எல்லாப் படங்களிலும் அந்த 'டான்ஸ்' ஆட மட்டுமே ஒப்பந்தம் செய்வார்கள். கதாநாயகியாக நடிக்கும் வாய்ப்புக் கிடைப்பது மிக அரிது.

கேள்வி: இப்போது வரும் படங்களில் அளவுக்கு அதிகமாகப் பாலுணர்வு இடம் பெற்று வருகிறதே, என்ன காரணம்?

பதில்: எல்லாவற்றுக்கும் மேல்நாட்டைக் காப்பியடிப்பது போலவே, இந்த விஷயத்திலும், இப்படிப்பட்ட படங்கள், இளைய சமுதாயத்தை மட்டுமல்லாமல் முதியவர்களின் மன நிலையைக்கூட நிச்சயம் பாதிக்கும்.

உலகத் திரைப்பட விழாவில் மூன்று திரைப் படங்கள் பார்த்தேன். மிக மோசமான படங்கள். இந்த விழாப் படங்களைவிட நம் நாட்டில் தயாரான பல படங்கள் எவ்வளவோ மேல் என்ற எண்ணம் எனக்குத் தோன்றியது! ஆனால் புலியைப் பார்த்துப்

# கடமையை

பூனை சூடு போட்டுக் கொண்ட கதையாக நாம் அவர்களைப் பார்த்துக் காப்பி அடிக்கிறோம். அவர்கள் பொருளாதார, விவசாய, தொழில் ரீதியில் எல்லா முன்னேற்றமும் அடைந்துவிட்டனர் என்பதை மறந்து போய் விடுகிறோம்.

**கேள்வி:** வளரும் நாடான இந்தியாவில், எப்படிப்பட்ட படங்கள் தயாராக வேண்டும்?

**பதில்:** சினிமாவின் மூலம் நல்லதையும் செய்யலாம்; தீயதையும் புகுத்தலாம்.

நம் இளைஞர்களிடம் நல்லதொரு லட்சியத்தையும், உழைப்பின் பெருமையையும், சமத்துவ நோக்கையும் வளர்க்கும் வகையில் படங்கள் எடுக்க வேண்டும்.

இன்றைய நிலையில் அதுதான் மிக அவசியமும், அவசரமும்கூட என்பது என் தாழ்மையான அபிப்பிராயம். ஆனால் பிரசார நோக்குடன் எடுக்கப்பட்ட படங்களாகத் தோன்றாமல், கலை உணர்வுக்கு முக்கியத்துவம் தந்து எடுக்க வேண்டும். படம் அப்போதுதான் வெற்றி பெறும்.

நல்ல பொழுதுபோக்கும், யாரையும் புண்படுத்தாத உயரிய நகைச்சுவையுடன்கூடிய படங்களும் மக்களுக்குத் தேவைதான்.

அப்படிப்பட்ட படங்களையும் வரவேற்கிறேன்.

**கேள்வி:** லட்சியப் படங்களுக்கு நீங்கள் எந்த அளவில் ஒத்துழைப்புத் தருவீர்கள்?

**பதில்:** தேவர் எடுத்த 'விவசாயி' படம் நல்ல கருத்துள்ள படம். இதில் எம்.ஜி.ஆருடன் நடித்திருக்கிறேன். நல்ல கதையுள்ள படங்களில் நான் நடிக்கத் தயங்குவதே இல்லை.

பிமல்ராய் எடுத்த 'தோ பீகா ஜமீன்' (இரண்டு ஏக்கர் நிலம்) போல், நல்ல தமிழ்ப் படம் எடுக்கலாம். பீம்சிங் எடுத்த 'பழநி' கூட நல்ல கிராமியக் கதை.

விவசாயத்தையும், உழைப்பையும் உயர்வு படுத்தும் படங்களைக் கலை உணர்வோடு எடுக்க முன்வருபவர்களுக்கு, என்னால் இயன்ற ஒத்துழைப்பையும் ஆதரவையும் நான் தருவேன். பார் முழுதும் ஏர்முனையிலே என்ற பாட்டு சினிமாவில் தோன்றியதுதானே!

**கேள்வி:** திரைப்பட நட்சத்திரமாகவும், ஒரு பெரிய தொழிலதிபரின் மனைவியாகவும் இருக்கும் நீங்கள், வெளிநாடுகளில் சுற்றுப் பயணம் செய்த சமயம் சிறப்பாக உங்கள் கவனத்தைக் கவர்ந்த விஷயம் என்ன?

**பதில்:** ஐரோப்பிய நாடுகளுக்கும் அமெரிக்காவுக்கும் சென்று வந்திருக்கிறேன். ஜப்பானுக்கும் போயிருக்கிறேன்.

அங்கெல்லாம், மக்கள் நேரத்தை வீணாக்குவதே இல்லை. சுறுசுறுப்புடன் எப்பொழுதும் செயல்படுகிறார்கள். உழைப்புத்தான் அவர்களை மேலும் மேலும் உயர வைக்கிறது. சட்டையில் அழுக்குப் படாமல் வேலை பார்ப்பதுதான் கௌரவம் என்ற நினைப்பு, அந்நாட்டவர்களிடம் இல்லை.

**கேள்வி:** திரையில் பிரகாசிக்கத் துடிக்கும் இளைய சமுதாயத்தினருக்கு நீங்கள் என்ன சொல்ல விரும்புகிறீர்கள்?

**பதில்:** திரைப்படங்களில் எந்தச் சிறிய வேடம் கிடைத்தாலும் ஏற்று, அந்தச் சிறிய பாத்திரத்தின் மூலம் தங்கள் திறமையை வெளிப்படுத்த வேண்டும்.

பிரபல நட்சத்திரங்களைக் காப்பி அடிக்காமல், ஒவ்வொருவரும் ஒரு தனிப் பாணியில் விளங்க வேண்டும் என்பதே.

**கேள்வி:** நடித்து முடித்து வீடு வந்ததும், குடும்ப வாழ்க்கையில், ஒரு மனைவி என்ற முறையில் உங்கள் கணவருக்கு என்னென்ன பணிவிடைகளை நீங்கள் அன்புடனும் ஆசையுடனும் செய்கிறீர்கள்? உங்கள் குழந்தைக்கும் சேர்த்துத்தான்!

**பதில்:** நான் ஞாயிற்றுக்கிழமைகளில் படப்பிடிப்பில் கலந்து கொள்வதில்லை. அதே போல் மாலை ஆறு மணிக்கு மேலும் படப்பிடிப்பு வைத்துக் கொள்வதில்லை.

வீட்டில் இருக்கும் நேரத்தில், என் கணவருடனும், குழந்தையுடனும் [illegible]



முதல் படம்: [illegible]

[illegible]ப்பேன். என் மகள் [illegible]வின் படிப்பை அன்புடன் கவனிப்பேன்.

என்னதான் வீட்டில் வேலை ஆட்கள் இருந்தாலும், ஒரு மனைவி என்ற முறையில் கணவனுக்கு உணவு அளிப்பதிலும், குழந்தைக்கு வேண்டியதைச் செய்து கொடுப்பதிலும் ஒரு தனி மகிழ்ச்சி ஏற்படத்தான் செய்கிறது. இதை அநுபவத்தில் நான் காண்கிறேன்.

பேட்டி: சீனு

# உணர்த்தட்டும் கலை!

# ஏட்டுக் கல்வியுடன் நாட்டுக் கல்வி!

ஸ்டெல்லா மேரி கல்லூரி மாணவிகள் 'சிக்'காக உடை அணிவார்கள் என்பது சென்னையில் ரொம்பப் பிரசித்தி. ஆனால் அவர்கள் ஆற்றலெல்லாம் அலங்காரத்துடன் முடிந்துவிடுவதாக யாராவது எண்ணினால் அதைவிடப் பெரிய தவறு வேறில்லை. படிப்பில் வீரர்கள், சமூகப் பணியில் சூரர்கள்.

ஸ்டெல்லா மேரி கல்லூரி முதல்வர் பெருமிதத்துடன் கூறுகிறார் :

கல்லூரிப் பெண் யாரோ ஒருத்தி தவறு செய்துவிட்டால் அது பிரமாதமாகப் பத்திரிகைகளில் அடிபடுகிறது. எங்கள் பெண்கள் எவ்வளவு நல்ல காரியம் செய்துவருகிறார்கள். அதை யாரும் கவனிப்பதில்லை. இப்போது நீங்கள் வந்திருப்பது எவ்வளவோ மகிழ்ச்சியாக இருக்கிறது!''

மாணவர்களைச் சமூகச் சேவைப் பணிகளில் ஈடுபடுத்திச்சமுதாயத்துடன் நெருங்கிய தொடர்பு கொள்ளச் செய்ய வேண்டும் என்ற நோக்கோடு 'தேசிய தொண்டர் அணி' என்ற திட்டம் வகுக்கப்பட்டுள்ளது.

இத்திட்டத்தின் கீழ் மாணவிகள் உற்சாகமாகச் செயல்படுகிறார்களா அல்லது கடன் எழவே என்று பணியாற்றுகிறார்களா என்று



சென்னை, ஸ்டெல்லா மேரி கல்லூரி மாணவிகள் தங்கள் அனுபவங்களைக் கூறுகிறார்கள்.

நேரில் கண்டறியச் சென்னையில் இரண்டு கல்லூரிகளுக்குச் சென்றேன்.

ஸ்டெல்லா மேரி கல்லூரியில் சுமார் 190 பெண்கள் இந்தச் சமூக நலப் பணித் திட்டத்தில் ஈடுபட்டிருக்கிறார்கள்! இவர்களில் சிலரைச் சந்தித்து அளவளாவினேன்.

கல்லூரிக்குப் பக்கத்திலேயே உள்ள சேரிகளில் வாழும் பெண்கள் கல்லூரிக்கு அண்மையிலுள்ள ரேஷன் கடையில் சாமான் வாங்க வருகிறார்கள். அவர்களை ஒரு மணி நேரம் முன்னதாக வரச் சொல்லி அவர்களுக்குக் கல்வி புகட்டுகிறார்கள் மாணவிகள்.

இப்படி வருகிறவர்கள் தங்கள் தங்கள் குடும்ப கஷ்ட சுகங்களைச் சொல்ல ஆரம்பித்துவிடுவார்களாம்! அனுதாபத்துடன் அவற்றைக் கேட்டுவிட்டுப் பிறகு மாணவிகள், சுதந்திர தினத்துக்கும், குடியரசு தினத்துக்கும் என்ன வித்தியாசம், வள்ளுவர் தினம் ஏன் கொண்டாடுகிறோம் என்றெல்லாம் விளக்குவார்கள். இதை வைத்தே எழுத்துக்களை மெல்லக் கற்பிப்பார்கள். எடுத்த எடுப்பில் ஆனா ஆவன்னா என்றால் சேரி மக்கள் யாரும் திரும்பிக்கூடப் பார்க்கமாட்டார்களாம் !

சிவஷண்முகபுரத்துக்கு நான் சென்று அங்குள்ள குடிசைவாழ் மக்களைச் சந்தித்தேன். ''ஏழைகளான நாங்கள் நெருங்க முடியாத அதிகாரிகளைக் கல்லூரி மாணவிகள் சந்தித்துப் பல நல்ல காரியங்களை எங்களுக்குச் செய்திருக்கிறார்கள்'' என்று நன்றி உணர்ச்சியோடு அவர்கள் கூறினார்கள்.

ராயப்பேட்டை ஆஸ்பத்திரி, ஜெனரல் ஆஸ்பத்திரி, மன நோயாளர் மருத்துவமனை ஆகிய இடங்களுக்கும் விஜயம் செய்து, நோயாளிகளுக்கு ஆறுதல் அளித்துப் பணிவிடையும் செய்து வருகிறார்கள் மாணவிகள்.

ஸ்டெல்லா மேரி கல்லூரியில் சுமார் ஐம்பது குடிசைவாழ் மக்கள் காய்கறித் தோட்டம் போட்டுக் கொள்ள மனை ஒதுக்கியிருக்கிறார்கள். ஆளுக்கு மூன்றரை அடி பரப்புள்ள நிலம் ஒவ்வொருவருக்கும் அளிக்கப்பட்டுள்ளது. அதில் தக்காளி, கீரை, முள்ளங்கி, வெண்டைக்காய் இப்படி ஏதாகிலும் பயிர் செய்து தங்கள் சொந்த உபயோகத்துக்கு எடுத்துச் செல்கின்றனர். இந்தப் பயிரைப் பார்க்க வரும் நேரத்தில் மாணவிகளிடம் சிறிது கல்வி பயிலவும் செய்கிறார்களாம் !

அடுத்து எதிராஜ் கல்லூரி மாணவிகளைச் சந்தித்துப் பேசினேன்.

''தோட்டி வேலை செய்யும், தெலுங்கு பேசும் பெண்கள் மூவருக்குத் தமிழ் கற்றுத் தந்திருக்கிறோம். அவர்கள் இன்று நன்றாகத் தமிழ் படிக்கிறார்கள். எவ்வளவு உற்சாகமாக வருகிறார்கள், தெரியுமா, படிக்க'' என்று குதூகலமாகக் கூறினார்கள் எதிராஜ் கல்லூரி மாணவிகள்.

சேத்துப்பட்டுக்கு அருகில் உள்ள 'அனாதை நிலைய'த்தில் முப்பத்தோரு அனாதைக் குழந்தைகள், நான்கு வயது முதல் பன்னிரண்டு வயதுக்குள் இருக்கிறார்கள். அவர்களுக்குப்



கம்மாளம்பூண்டி கிராமத்தில் மாணவிகள் சாலை அமைக்கிறார்கள்



எதிராஜ் கல்லூரி மாணவிகளும் காப்டன் என். சுப்பராமனும்.

படிப்பில் உதவுவது; ரவா கஞ்சி; உப்புமா, பால் ஆகியவை வழங்குவது போன்ற பணிகளைப் புரிகிறார்கள்.

முதியோர் விடுதிக்குச் சென்று அவர்களுக்கு வந்துள்ள கடிதங்களைப் படித்துக் காட்டுதல், அவர்கள் யாருக்காவது கடிதம் எழுத விரும்பினால் எழுதுதல், அவர்கள் பொருட்களைத் தூசி தட்டி வைத்தல், சிறிது நேரம் பேச்சுத் துணையாய் இருத்தல் என்றெல்லாம் பல காரியங்களைச் செய்கிறார்கள்.

1973ம் ஆண்டு ஸ்டெல்லா, எதிராஜ், கடலூர் கந்தசாமி மகளிர் கல்லூரி — ஆகிய மூன்று கல்லூரி மாணவிகள் - சுமார் எண்பது பேர் செங்கல்பட்டு ஜில்லாவில் உத்தரமேருருக்கு அண்மையில் கம்மாளம் பூண்டி என்ற கிராமத்தில் ஒன்றரைக் கிலோ மீட்டர் நீளத்துக்கும் அதிகமாகக் கல் பரப்பி, மண் தூவிச் சாலை அமைத்திருக்கிறார்கள். இதற்காக அவர்கள் அப்பகுதியில் எட்டு நாட்கள் தங்கி வேலை செய்திருக்கிறார்கள். இதைப் பாராட்டி அந்தப் பஞ்சாயத்துத் தலைவர் கல்லூரிகளுக்குக் கடிதம் எழுதியிருப்பதை எதிராஜ் கல்லூரி முதல்வர் பெருமையுடன் கூறிவிட்டு மேலும் சொன்னார்:

''எனக்கு என்னவோ கல்லூரிப் பெண்களுக்கு ராணுவப் பயிற்சி அளிப்பதைவிட இத்தகைய சமுதாய நலப் பணி புரியும் ஆர்வத்தை வளர்ப்பது எவ்வளவோ பயனுள்ளது என்று தோன்றுகிறது. தங்கள் வீட்டில் ஒரு சின்ன தேக்கரண்டியை எடுத்து வைக்க முன் வராத பணக்கார வீட்டுப் பெண்கள் எல்லாம் பட்டிக்காட்டுக் கிராமங்களுக்குச் சென்று, சேலையை இடுப்பில் வரிந்து கட்டிக் கொண்டு தலையில் கம்மாட்டு வைத்துக் கல்லையும் மண்ணையும் சுமந்து உற்சாகமாக வேலை செய்வதைக் காணும்போது எனக்கு எவ்வளவோ மகிழ்ச்சியாக இருக்கிறது. பாமர மக்களை நன்கு புரிந்து கொள்ளும் வாய்ப்பு மாணவிகளுக்குக் கிட்டுகிறது. கல்லூரிப் பெண்களைப் பற்றித் தெரிந்து கொள்ளப் பாமர மக்களுக்கு நல்ல வாய்ப்பு ஏற்படுகிறது. மொத்தத்தில் சமத்துவ நோக்கு வளர்வது நாட்டின் எதிர்காலத்துக்கு எவ்வளவோ நல்லது.''

தேசியத் தொண்டர் அணி தமிழ்நாட்டில் சென்னைப் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த நாற்பத்தி நாலு கல்லூரிகளில் அமுல்படுத்தப்படுகிறது. இதற்கு ஜீவநாடியாக விளங்குபவர் இத்திட்டத்தின் இயக்குநர் காப்டன் என். சுப்பராமன் அவர்கள். காந்திய பரம்பரையைச் சேர்ந்தவராதலால் சமூக நலத் திட்டங்கள் மாணவர்களுக்கு எவ்வளவு பயன் உள்ளவை என்பதை நன்கு உணர்ந்திருக்கிறார். ஒவ்வொரு கல்லூரியின் சூழ்நிலையையும் ஆராய்ந்து அதற்குத் தக்க திட்டங்களை அமைத்துக்கொடுத்து வருகிறார்.

ஏட்டுக் கல்வியுடன் நாட்டுக் கல்வியும் பெறும் மாணவ — மாணவிகள் பாக்கியசாலிகள்!

—எஸ்.வி.எஸ்.

---

**மதிப்புமிகுந்த உடை**

1606ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 14ந் தேதி பிரான்ஸ் அரசி மேரி டிமெடிசி அணிந்து கொண்ட உடைதான் இன்று வரை உலகிலேயே அதிக விலை உயர்ந்த ஆடையாக நிற்கிறது.

அந்த உடையில் ஐம்பது பவுண்டு எடையுள்ள 39,000 முத்துக்களும், 3,000 வைரங்களும் வைத்துப் பூ வேலை செய்யப்பட்டிருந்தது. இந்த உடையின் மதிப்பு அப்பொழுதே 19 மில்லியன் டாலர்களாகும். ராணி இந்த உடையைத் தம் மகனின் பெயர்சூட்டு விழாவுக்கு அணிந்து கொண்டாராம்.

**திராட்சை உடை**

டெக்சாசைச் சேர்ந்த லேலா ஃப்ளோரல் என்ற பெண்மணி முழுவதும் திராட்சை (கிரேப்ஸ்) யிலாலேயே தயாரிக்கப்பட்ட ஆடையை அணிந்தாராம். அதன் எடை 64 பவுண்டுகள். - குமிலி



# 2 ஃபாஸ்ஃபோமின் டானிக்...









## ஃபாஸ்ஃபோமின் அயன்

**பெண்களுக்கான**
**அயன் டானிக்**

ஃபாஸ்ஃபோமின் அயன் சத்து மிக்க சிவப்பு இரத்தம் உருவாகக் காரணமாயிருந்து உதவுவதுடன் சக்தியையும் பெருக்குகிறது. பெண்களுக்கான ஃபாஸ்ஃபோமின் அயனைத் தவறாமல் தினம் உட்கொள்ளுங்கள்.

## ஃபாஸ்ஃபோமின் விடமின்

**குடும்பத்திற்கான**
**விடமின் டானிக்**

ஃபாஸ்ஃபோமின் குடும்ப ஆரோக்கியத்திற்குத் தேவையான விடமின் பி காம்ப்ளெக்ஸ் மற்றும் பல்வேறு கிளிஸரோபாஸ்பேட்டுகள் அடங்கிய விடமின் டானிக்காகும்.

**குடும்பத்தினர் அனைவரும் திட ஆரோக்கியத்துடன் திகழ 2 ஃபாஸ்ஃபோமின் டானிக்**

ஃபாஸ்ஃபோமின் அளிக்கும் இரு டானிக்குகளும் பசியைத் தூண்டி, வலிவைப் பெருக்கி, நோய்களை எதிர்க்கும் சக்தியைக் கூட்டுவனவாகும்.

SQUIBB® SARABHAI CHEMICALS LTD.

ஈ.ஆர்.ஸ்க்விப் அண்ட் ஸன்ஸ் இன்கார்ப்பரேடெட் அவர்களின் ரெஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க்காகும். எஸ்.ஸி.எல். இதை உபயோகிக்க உரிமை பெற்றவர்கள்.

SHILPI SC-8A/74 TAM

# தேவைக்கு ஏற்ற சேவை

## காவல்துறை காரிகை

சென்னை நகரக் காவல் துறையில் சப் இன்ஸ்பெக்டராகப் (உதவி ஆய்வாளர்) பணியாற்றத் தொடங்கியிருப்பவர் குமாரி உஷா. வேலூரில் உள்ள ஆக்ஸிலியம் மகளிர் கல்லூரியில் ரசாயன பாடத்தை எடுத்துப் படித்து பி. எஸ்ஸி. பட்டம் பெற்ற இவர், வேலைக்காக முதல் மனு எழுதியது சென்னை நகரக் காவல் துறைக்குத்தான். இவர் அதிருஷ்டம் அந்த முதல் மனுவே வெற்றிகரமாக இவருக்கு வேலை வாய்ப்பைத் தேடிக் கொடுத்தது.

சப் இன்ஸ்பெக்டராகத் தேர்ந்தெடுக்கப் பெற்று போலீஸ்டெபுடி கமிஷனர் திரு ஆர். கானியப்பனிடம் போதிய பயிற்சி பெற்றிருக்கிறார். குதிரை ஏற்றம், கராத்தே போன்ற பயிற்சிகளையும் திரு கானியப்பன் அளித்திருக்கிறார்.



குமாரி உஷா

போலீஸ் கமிஷனர், குமாரி உஷாவிடம் விசாரணைக்காக ஒப்படைத்த முதல் கேஸ் வேடிக்கையானது. ஒரு 'கொடுங்கோல்' மாமியார் மீது மருமகள் வீட்டைச் சேர்ந்தவர்கள், தங்கள் வீட்டுப் பெண்ணை மிகவும் கொடுமைப் படுத்துவதாகப் பெட்டிஷன் கொடுத்திருந்தார்கள்.

குமாரி உஷா புகாரில் உண்மை இருக்கிறது என்று உணர்ந்து தம் 'ரிப்போர்ட்'டைச் சமர்ப்பித்தார்.

சமீபத்தில் முதலமைச்சரின் போலீஸ் பதக்கங்கள் வழங்கு விழா மதுரையில் நடந்த போது, இவர் கையில் வாளேந்திப் பெண் போலீஸ் பகுதிக்குத் தலைமை வகித்து நடத்திச் சென்றார்.

## சோதிடப் புலி !

கே. என். சரஸ்வதி



''காலம் சென்ற பிரபல ஜோதிடர் பண்டித கடலங்குடி நடேச சாஸ்திரிகளின் ஐந்தாவது புதல்வி திருமதி சரஸ்வதி தம் தந்தை வழி வந்து இன்று ஜோதிடத் துறையில் பிரகாசிப்பது வியப்புக்குரிய விஷயமில்லை. நடேச சாஸ்திரி சரஸ்வதிக்குப் பள்ளிப் பருவத்திலிருந்தே, ஜோதிடப் பயிற்சியில் ஆர்வத்தைத் தோற்றுவித்தார். குரு சிஷ்ய பாவத்தில், தம் குமாரிக்குக் கண்டிப்புடனேயே பயிற்சி அளித்தார்.

திருமதி சரஸ்வதி, பெண்கள் கிறிஸ்துவக் கல்லூரியில் கணிதத்தையும் வான சாஸ்திரத்தையும் பாடமாக எடுத்துப் படித்துப் பி.ஏ. பட்டம் பெற்றார். பிறகு, ஜோதிடக் கலைக்கு அத்தியாவசியமான மனோதத்துவ நுட்பங்களைப் புரிந்து கொள்ள, ஆசிரியப் பயிற்சியும் பெற்று எம். இடி. பட்டத்தையும் சேர்த்துக் கொண்டார். அமெரிக்க ஜோதிட வல்லுனர்கள் சங்கத்தில் உறுப்பினரும்கூட.

''மனோதத்துவப் பாடத்தில் பயிற்சி பெற்றிருப்பது இந்த ஆருடக் கலைக்கு உதவியாக இருக்கிறது'' என்கிறார் திருமதி சரஸ்வதி.

அதோடு இந்தக் கலைக்கு மனசு பரிசுத்தமும் தெய்வ பக்தியும் அவசியம் என்கிறார். இவர் ஒரு தேவி உபாசகர்.

இவர் கணவர் திரு அர்த்தநாரீசுவரன், குருநானக் கல்லூரியில் ஆங்கிலப்பேராசிரியர்.

## எலெக்ட்ரானிக்ஸ் எக்ஸ்பர்ட் !

ராணி மேரி கல்லூரி மூலம் பௌதிக பாடத்தில் பி. எஸ்ஸி. பட்டம் பெற்றவுடன் 'எலெக்ட்ரானிக்ஸ்' பிரிவில் தேர்ச்சி பெறக் கிண்டி பொறியியல் கல்லூரி பி. ஈ. வகுப்பில் சேர்ந்தார். பி. ஈ. பட்டம் பெற்ற பின்னும் பொறியியல் கல்லூரியில் இவரை வெளியே அனுப்பவில்லை! ஆசிரியையாக நியமித்துக் கொண்டது.

இவருக்கு இந்தப் பொறியியல் துறைக்கு வழிகாட்டியது இவருடைய மூத்த சகோதரிதான். அவர் 'எலெக்டிரிகல்' பிரிவில் இதே பொறியியல் கல்லூரியில் பி. ஈ. பட்டம் பெற்றிருக்கிறார்.

''வளர்ந்துவரும் 'எலெக்ட்ரானிக்ஸ்' துறையில் பல புதிய கண்டுபிடிப்புகள் தோன்றியிருக்கின்றன. ஆகவே, இந்தத் துறை சுவாரசியம் மிகுந்ததாக இருக்கிறது. உற்சாகமூட்டுவதாகவும் இருக்கிறது'' என்கிறார் குமாரி சாந்தா.

## பாங்கில் ஒரு பாவை !

கணித பாடத்தில் சிறப்பாக எம். எஸ்ஸி. பட்டத்தைப் பெற்றுவிட்டுத் தீவிரமாக ஐ. ஏ. எஸ். பரீட்சைக்குப் படித்துக் கொண்டிருக்கும் நேரம். சுகந்தாவின் சகோதரர் ஒரு பெரிய 'பாங்க்' விளம்பரத்தைக் காட்டி அதற்கு மனுப் போடச் சொன்னார். பாங்க் உயர் அதிகாரிகளின் தேர்வுக்கான விளம்பரம் அது.

சுகந்தாவுக்குப் பூரண சம்மதமில்லைதான். ஆனாலும் விண்ணப்பத்தைப் பூர்த்தி செய்து அனுப்ப வைத்தார். அந்த விண்ணப்பம் தபால் பெட்டியில் போடப்பட்ட

நேரம் அதி ருஷ்ட நேரம். சிண்டிகேட் பாங்கின் மணிப்பால் தலைமைக் காரியாலயம் குமாரி சுகந்தா வைத்தேர்ந்தெடுத்தது. அங்கேயே பயிற்சி அளிக்கவும் ஏற்பாடு செய்தது. குமாரி சுகந்தா சிண்டிகேட் பாங்கில் ஒரு பொறுப்புள்ள உயர் அதிகாரியாக மாறிச் சென்னைக் கிளைக்குப் பதவி ஏற்கத் திரும்பினார். ஐ. ஏ. எஸ். அதிகாரியாக நினைத்த ஆசை அவரைவிட்டு அகன்றது.



எஸ். சாந்தா

''பெண்களைச் சிப்பந்திகளாக நியமிக்கும் விஷயத்தில் சிண்டிகேட் பாங்க் அந்த நாட்கள் லிருந்தே வழிகாட்டியிருக்கிறது'' என்று கூறும் சுகந்தா மிகுந்த மன நிறைவோடு அடிக்கடி நினைக்கும் சம்பவம் எது?

ஒரு சிறு சேமிப்புக்காரர், 'பக்மி' சேமிப்பு முறை என்ற வகையில் தினசரி சிறுகச் சிறுகச் சேர்த்து இந்தப் பாங்கியில் போட்டு ஏழு வருடங்கள் கழித்துத் திரும்பப் பெற்றார். அந்தப் பணத்தைக் கொண்டு அவர் ஒரு சிறு தொழில் நிறுவனத்தை ஆரம்பித்தார். லாபகரமாகத் தொழில் வளர்வது பற்றி அவர் மகிழ்ச்சியுடன் சுகந்தாவிடம் வந்து தெரிவித்தார். ''இத்தகைய உழைப்பாளர்கள்தாம் நாட்டை உயர்த்த முடியும்'' என்கிறார் சுகந்தா;



மிஸ் ஆர். சுகந்தா

## துறவி ஸ்ரீ சாயிமாதா

துக்கத்தின் எல்லையிலிருந்தும் சோதனையின் விளிம்பிலிருந்தும் துறவறத்துக்குத் தாண்டுவது சகஜமாக ஏற்படக்கூடிய சூழ்நிலை. ஆனால் செல்வம் கொழிக்கும் குடும்பத்தில், பிறந்து சுமக்க முடியாத அளவுக்கு நகைகளும் கட்டி மாளாத அளவுக்குப் பட்டுப் புடவைகளும் மனத்தைக் கவர வாய்ப்பு இருந்தும், அவைகளை உதறிவிட்டு, நாற்பது வயதுக்குள்ளாகவே சன்னியாச ஆசிரமத்தை ஏற்றுக்கொண்டவர் புதுக்கோட்டையைச் சேர்ந்த சிவ. பிருந்தாதேவி அவர்கள்.

சிறு வயதிலிருந்தே சைவ, வைஷ்ணவ சமய நூல்களையும் வேதாந்த நூல்களையும் ஆக்கறையுடன் படித்துத் தம் சொந்த சொற்பொழிவுத் திறமையை வளர்த்துக் கொண்டார். அந்தத் திறமைக்கு அடிக்கடி மெருகேற்றிக் கொள்ள அவருடைய மலேசிய இலங்கைப் பயணங்கள் உதவின. அண்ணாமலை சர்வகலாசாலையில் கீழை நாட்டு வேதாந்த பாடத்தை எடுத்துப் படித்ததோடு அல்லாமல், பல பெரிய வித்வத் சிரோன்மணிகளையும் அண்டி, சமய போதனைகளைப் பெற்றார்.

சிவ - பிருந்தா தேவி



ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீவிபூதி சாயி பாபா அவர்கள் அனுக்கிரகம் செய்திருந்த தேன் அவர்களுக்குச் சந்நியாச ஆசிரமத்தை வழங்கினார். தீக்ஷாநாமமாக ஸ்ரீ சாயி மாதா என்ற பெயரும் சூட்டப்பட்டது.

வீட்டில் இவர் கடைசிப் பெண். செல்லப் பெண். ஆகவே எதிர்ப்பு நிறைய இருந்தது. நாளடைவில் சரியாகவும் போய்விட்டது.

ஏற்கனவே புதுக்கோட்டையில் 'முத்துலட்சுமி ரெட்டி மகளிர் இல்லம்' என்ற பெயரில், உணவு, உடை, இருப்பிடம் வசதியுடன் பெண்களுக்கு உயர் கல்வி அளிக்க வசதி செய்திருக்கிறார். சந்நியாசத்தை ஏற்றுக் கொண்டால் இந்த மாதிரி நிறுவனங்கள் மீது நேரடியாகக் கவனம் செலுத்த முடியாமல் போகலாம் என்ற அடிப்படையில் சந்நியாசத்தை மீண்டும் சில சடங்குகளுடன் ராஜ சந்நியாசமாக மாற்றிக் கொண்டார்.

இவர் சமீபத்தில் எழுதி வெளியிட்ட 'மனிதன் எங்கேயோ போகிறான்!' என்ற தத்துவ விசாரப் புத்தகம் சென்ற ஆண்டில் இரண்டு பதிப்புக்கள் வெளியாயின.

**பேட்டி : கோமதி சுவாமிநாதன்**

ஒரு பெண்ணின் வாழ்க்கையை மூன்று கட்டங்களாகப் பிரிக்கலாம். முதல் கட்டத்தில், அவள் அன்பைப் பற்றிக் கனவு காண்கிறாள்; இரண்டாவதாக, அன்பை அனுபவித்துப் பார்க்கிறாள்; இறுதியாக, அவள் அதனை நினைத்து வருந்துகிறாள். - ப்ரோஸ்பெர்

பெண்களுக்குக் கிடைக்கும் மதிப்பு, அவர்களுடைய நேர்மையான நடத்தையை மட்டும் பொருத்ததல்ல. அடிக்கடி நிகழும் நிகழ்ச்சிகள் அவர்கள் செய்து கொள்ளும் அலங்காரம் அவர்களின் உடைகளின் தோற்றம், இவைகளையும் பொருத்ததுதான் என்பதை, அவர்கள் நன்கு உணர வேண்டும்.
- லியோ டால்ஸ்டாய்

ஆண்கள் தங்கள் இதயங்களால் சிரிப்பார்கள்;
பெண்கள் தங்கள் உதடுகளால் சிரிப்பார்கள்.
- அரேபியப் பழமொழி

அதிர்ஷ்டமுள்ளவன் ஒரு நல்ல நண்பனைச் சந்திக்கிறான்; அதிர்ஷ்டம் கெட்டவன் ஓர் அழகியைச் சந்திக்கிறான்.
- ஜப்பானியப் பழமொழி

கடல் வாங்கி ஒளிரும் சந்திரன் போன்றவள் பெண்.
- பிரஞ்சுப் பழமொழி

தொகுப்பு: முதன்

# உண்மையே உன் விலை என்ன?



சோ

## பூர்வ கதை

டாக்ஸி டிரைவர் தாமஸ் ஒரு பெண்ணைப் பெரும் பணக்காரர் ஆரோக்கியசாமியின் வீட்டுக்குத் தன் வாகனத்தில் ஏற்றிப் போகிறான். அங்கே ஆரோக்கியசாமியின் மகன் அவளைப் பலவந்தப்படுத்துவதைத் தற்செயலாகக் கண்டு ஆத்திரமடைந்து அவனை அடித்து விடுகிறான். அவன் இறந்து விழ அந்தப் பெண் பயந்து ஓடி விடுகிறாள். தாமஸ் கொலைக் குற்றவாளி எனப் போலீஸ் தீர்மானிக்கிறது. பாதிரி அருமைநாயகம் பாவமன்னிப்புக் கோரி வரும் தாமஸின் கன்ஃபெஷனைக் கேட்டு அவன் கொலைக் குற்றவாளி அல்ல என்று தீர்மானிக்கிறார். அவனை விடுவிக்கச் சாட்சியங்களைத் தேட எண்ணி அவனை மறைத்து வைக்கிறார். கொலைக் குற்றவாளியை ஒளித்து வைத்த குற்றத்துக்காகப் பாதிரியைப் போலீசார் கைது செய்கின்றனர். அவரை ஜாமீனில் விடுவிக்கும் வக்கீல் சத்திய நாராயணா வழக்கில் வாய்தாவும் பெறுகிறார்.

தெலுங்கர் சத்தியநாராயணாவின் மனைவி பங்கஜம் தமிழ் மகள். இவர்களுக்குப் பிறந்த வெங்கட் வாலிப வயதினன், விஷமி. சிறிய டேப் ரிகார்டர் உதவியுடன் ரகசிய உரையாடல்களைப் பதிவு செய்து விடுவான். சிரிப்பும் மகிழ்ச்சியும் நிரம்பிய குடும்பம்.

வழக்கில் வாய்தா பெற்றதும் தாமஸ் சார்பில் சாட்சியங்கள் சேகரிக்க நினைத்து அவன் டாக்ஸியில் ஏற்றிச் சென்ற பெண்ணின் வீட்டை அடைகிறார் பாதிரி. அந்தப் பெண் சீதா கணவனுக்குப் பயந்த மனைவி. கணவன் குப்புசாமியோ பெரும் சந்தேகப் பேர்வழி. சீதா தான் டாக்ஸியிலேயே ஏறியது கிடையாது என்று சாதிக்கிறாள். பாதிரி குழப்பத்துடன் விடைபெறுகிறார்.

### காட்சி - 7

(ஆரோக்கியசாமி வீடு. டபிள் சோபாவில் பாதிரியார் அருமைநாயகம் அமர்ந்திருக்கிறார். ஆரோக்கியசாமி மிகவும் பணிவுடன் நின்று கொண்டிருக்கிறார்.)

அருமைநாயகம்: ஆரோக்கியசாமி! டாக்ஸி டிரைவர் தாமஸ், என்ன சொன்னான் றதை நான் எப்படிச் சொல்ல முடியும்? நீங்க ஒரு கிறிஸ்துவர்தானே, உங்களுக்குத் தெரியாதா? கன்ஃபெஷன்லே என்னிடம் ஒருத்தன் சொன்னதை நான் வெளியிடலாமா?

ஆரோக்கியசாமி: கோர்ட்டிலேகூடவா?

அரு: நீதிமன்றம் ஆண்டவனுக்கு மேம்பட்டது இல்லே மிஸ்டர் ஆரோக்கியசாமி! ஹி ஈஸ் சுப்ரீம். அவரிடம் கோரப்பட்ட பாவ மன்னிப்பை அவர் கேட்டுக்கிட்டிருந்தார். அவர் மன்னிப்புக் கொடுத்தார்.

ஆரோ: ஃபாதர்! என் மகனை ஒருத்தன் கொலை செய்திருக்கான். அவனை நீங்க சட்டத்துக்கிட்டேயிருந்து மறைச்சு வெச்சிருக்கீங்க.... என் மனசு எவ்வளவு வேதனைப்படுது தெரியுமா?

அரு: மை டியர் சன். அவன் நிரபராதி. அதை நான் நிரூபித்துக் காட்டறேன். அவன் உண்மையான கிறிஸ்தவன்.

ஆரோ: அவன் பேர் தாமஸ் தியாகராஜன் இல்லே?

அரு: ஆமாம். அவன் மதம் மாறிக் கிறிஸ்தவன் ஆனவன் தான். ஆனா கடவுளை நம்பறவன், மத்தவங்களுக்குக் கெடுதல் நினைக்காதவன் எவனுமே உண்மையான கிறிஸ்தவன் தான்.

ஆரோ: ஃபாதர்! நீங்க இந்த மாதிரி அவனுக்கு அடைக்கலம் கொடுக்கறதனாலே நம்ம சர்ச்சைப்பத்தி ஊர்லே கேவலமா பேசறாங்க.

அரு: ஏசுவையே கேவலமா பேசின உலகம் இது. அதுக்காக ஏசு உலகத்தின் மேலே வெறுப்படையலே. உண்மைக்காகவே உழைச்சார்.

ஆரோ: ஃபாதர் மன்னிச்சுக்குங்க...தெரியாமதான் கேக்கறேன். நீங்க இப்ப உண்மைக்காகவா உழைக்கிறீங்க? ஒரு கொலைக் குற்றவாளிக்கு அடைக்கலம் கொடுத்துட்டு மகனை இழந்து நிக்கற என்னை வந்து என்ன நடந்தது சொல்லுன்னு விசாரிக்கிறீங்க.

அரு: உண்மையை நான் சொல்லக்கூடிய நிலைமையிலே இல்லே. ஆனால் உண்மைக்குச் சாட்சியங்கள் கிடைச்சாத்தான் அந்த நிரபராதி விடுதலை அடைய முடியும். அவன் நிரபராதி இல்லேன்னு எனக்குத் தெரிஞ்சா, கடவுள்கிட்ட மன்னிப்புக் கேட்டுக்கிட்டு அவனைச் சட்டத்தின் கையிலே ஒப்படைச்சுடுவேன்......

ஆரோ: ஆல் ரைட். அவன் உங்ககிட்ட என்ன சொன்னானோ, எனக்குத் தெரியாது. நடந்ததை நான் சொல்றேன். என் மகன் பேர் பரிசுத்தம். இருபத்தைந்து வயது. ரொம்ப நேர்மையானவன். அவன் நேர்மையா இருந்தது மட்டுமில்லே. உலகத்திலே எல்லாரும் நேர்மையா இருக்கணும்னு நினைச்சான். யாராவது சின்னத் தப்பு செய்தால்கூட அவனுக்குத் தாங்கமுடியாத கோபம் வந்துடும். ஒரு நாள் என் மகன், மஹாபலிபுரம் போயிட்டுத் திரும்பி வர வழியிலே ஒரு டாக்ஸி நின்னுக்கிட்டிருந்தது. அந்த டாக்ஸியிலே தாமஸ் தியாகராஜன்... அவன் பேர் இப்பத்தானே தெரியும்....ஒரு பொண்ணைப் பலவந்தப்படுத்திக்கிட்டிருந்தான். அதை என் மகன் பார்த்துட்டான். அவனுக்குக் கோபம் தாங்க முடியலே. அந்த டாக்ஸி டிரைவரை நல்லா அடிச்சுட்டான். மானேஜர் இளார்க் எல்லாரும் தடுத்தாங்க. நல்லா அடிச்சு அவனை விரட்டிட்டான். அப்பவே அந்த டாக்ஸி டிரைவரைப் போலீஸ்லே

ஒப்படைச்சிருக்கலாம். ஆனா கோபம் இருக்கிற இடத்துலே குணம் இருக்கும்னு சொல்லுவாங்க. என் மகனுக்கு எவ்வளவு கோபம் வருமோ அவ்வளவு கருணே உண்டு. எங்க குடும்பத்திலே அது ஒரு பலவீனம். யாராவது அழுதால் எங்களுக்குப் பொறுக்காது. உடனே உதவி பண்ணிடுவோம். அந்த டாக்ஸி டிரைவர் அழுதிருக்கான். என் மகன் சரி பொழைச்சுப் போகட்டும்னு போலீஸிலே சொல்லாம விரட்டிட்டான். சென்னே சேர்ந்ததும் அந்தப் பொண்ணு வழியிலே இறங்கிக்கிட்டா. அந்தப் பொண்ணு யாருன்னுகூடத் தெரியாது. என் மகனும் கேக்கலே. பெண்களேக் கண்டா அவனுக்குக் கொஞ்சம் கூச்சம். பேசமாட்டான். அந்த நிகழ்ச்சி முழுவதையும் அன்னிக்கு இரவே பையன் சொன்னன். சரி போகட்டும்னு விட்டுட்டேன். ஆனா அந்த அயோக்கியன் டாக்ஸி டிரைவர் அதை மனசுலே வைச்சுக்கிட்டுப் பழிக்குப் பழி வாங்கனும்னு துடிச்சிக்கிட்டு இருந்திருக்கான். போன ஜனவரி மாதம் முப்பதாம் தேதி வீட்டுக்குள்ளே புகுந்து என் பையனே அடிச்சுக் கொன்னுட்டான். கரெக்டாப் பார்த்தா காந்தி செத்துப் போன அதே தேதி. அதே நேரம். என் பையனும் போயிட்டான். நீங்க கோட்ஸேயை மறைச்சு வெக்கற மாதிரி.... இட் ஈஸ் ஆல் ரைட்....

அரு: தேவையில்லாம பெரிய மகான்கள் பெயரை நாம எதுக்குப் பயன்படுத்தணும் ?

ஆரோ: கோட்ஸேயையா மகான்னு சொல்றீங்க ?

அரு: என் மனசுலே காந்திதான் நிக்கறாரே தவிர கோட்ஸே நிக்கலே....

ஆரோ: அப்ப என் மனசுலே கோட்ஸே தான் நிக்கறான்றீங்களா ?

அரு: மை டியர் சன். நான் உள்ளர்த்தம் வெச்சுப் பேசறவன் இல்லே... ஆண்டவனின் எளியதொரு வேலேக்காரன் நான்.

ஆரோ: நான் சொன்ன விவரங்களே உண்மைன்னு நினேக்கிறீங்களா ? பொய்ன்னு நினேக்கிறீங்களா ?

அரு: யார் பேசறதையும் நான் பொய்னு நினேக்கிறது இல்லே. நீங்க சொன்னது பொய்ன்னு நிரூபிக்கப்பட்டாலொழிய அதைப் பொய்ன்னு சொல்லவோ நினேக்கவோ நான் யாரு ?

ஆரோ: உங்களுக்கே உண்மை புரியத் தான் போகுது.

அரு: நானும் அப்படித்தான் நம்பறேன். ஏசுவை நம்பி ஒரு பாதையிலே போக ஆரம்பிச்சுட்டேன். அது தவறுன பாதையா இருந்தா அவனே எனக்கு வழிகாட்டுவான். மிஸ்டர் ஆரோக்கியசாமி. அவசியம் இருந்தா நான் திரும்பி வரேன். அவசியம் இல்லாட்டி வரமாட்டேன். அப்படி நான் திரும்பி வரலேன்னு இந்த முறை வந்து உங்களுக்குச் சிரமம் கொடுத்ததுக்காக என்னே மன்னிச்சுக்குங்க.

ஆரோ: நோ...நோ...நாட் அட் ஆல்... நான் உங்களே மன்னிக்கிறதாவது ? நீங்க தான் என்னே ஆசீர்வதிக்கணும் !

அரு: காட் பிளஸ் யூ....

(போவதற்காகத் திரும்புகிறார்)

ஆரோ: அடுத்தாற் போல் நீங்க என்ன செய்யப் போறீங்க ஃபாதர் ?

அரு: எனக்குத் தெரியாது. நான் உண்மையைத் தேடிக்கிட்டிருக்கேன். எனக்குத் திக்கு திசையும் புரியலே; போக வேண்டிய தூரம் எவ்வளவுன்னும் புரியலே !

ஆரோ: திக்குத் திசை தெரியாம பிரயாணம் செய்யறது அர்த்தம் இல்லாத காரியம் இல்லேயா?

அரு: வாழ்க்கையிலே அர்த்தமில்லாத காரியங்கள் எவ்வளவோ பண்ணிக்கிட்டிருக்கோம். ஆண்டவன் எனக்கு வழிகாட்டுவான். பயணத்தைத் தொடருகிறேன்.

ஆரோ: அப்படிப் பயணம் செய்வது நேரத்தை வீணுக்குவதாகாதா?

அரு: இருக்கலாம்; ஆனல் அதில் குற்றம் ஒன்றுமில்லே. என்னு நான் டிக்கெட் இல்லாமப் பயணம் செய்யலே. உண்மையும் ஆண்டவனிடம் நம்பிக்கையும்தான் என் டிக்கெட். லெட் மி டிராவல். காட் பிளஸ் யூ....(தொடரும்)

"அப்போ என் மனசுலே கோட்ஸேதான் நிக்கறான்றீங்களா ?"



பண்டிட் P.S. ராமசர்மாவின்

# சக்தி சஞ்சீவி

குழந்தைகளின்

ஈரல், குலைக்கட்டிகளுக்கு.

## எமது வைத்தியரின் மாதாந்திர சுற்றுப் பிரயாண விபரம் II

| ஊர் | தேதி | நேரம் | தங்கும் இடம் |
|---|---|---|---|
| கோவில்பட்டி | 12 | காலை 10-00 -- 11-00 | மணி அண்டு கோ., மெயின் ரோடு. |
| திருநெல்வேலி ஜங்ஷன் | 12 | மாலை 3-00 -- 6-00 | பாம்பே ஹால் லாட்ஜிங் ஹவுஸ், மெயின் ரோடு |
| அம்பாசமுத்திரம் | 13 | காலை 9-00 -- 10-00 | Dr. மகாதேவ அய்யர் வீடு, கீழ ரத வீதி. |
| தென்காசி | 13 | மாலை 3-00 -- 5-00 | ஷண்முகம் மெடிகல் ஸ்டோர்ஸ், வடக்கு ரத வீதி. |
| ராஜபாளையம் | 14 | காலை 10-00 -- 11-00 | ஸ்ரீ R. A. முத்துசாமி பிள்ளை மெடிகல் ஸ்டோர்ஸ், பாங்கு ரோடு. |
| ஸ்ரீவில்லிபுத்தூர் | 14 | காலை 11-30 -- 12-30 | ஸ்ரீ A. L. நாராயணய்யர், ஜவுளிக்கடை, கந்தாடைத் தெரு. |
| பெரியகுளம் | 14 | மாலை 5-00 -- 6-30 | யூனைடெட் மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| திண்டுக்கல் | 15 | காலை 8-00 -- 9-30 | K. M. மெடிகல் ஸ்டோர்ஸ், அம்மன் சன்னதி தெரு. |
| நாமக்கல் | 15 | மாலை 3-30 -- 4-30 | கஸ்தூரிபா மெடிகல் ஸ்டோர்ஸ், பரமத்தி ரோடு. |
| ராசிபுரம் | 15 | மாலை 5-30 -- 6-30 | ராசிபுரம் மெடிகல் ஸப்ளைஸ். |
| சேலம் | 16 | காலை 9-11 | லக்ஷ்மி ராஜ்பவன், (டவுன் ஸ்டேஷன் எதிர்புறம்) |
| ,, | 16 | மாலை 3 - 5 | |
| ,, செவ். பேட்டை | 16 | மாலை 1-30 -- 2-30 | பிரபாத் மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| தர்மபுரி | 17 | காலை 10-30 -- 12-00 | P. S. வெங்கடேஸ்வரய்யர் வீடு, யூனியன் ஆபீஸ் தெரு |
| கிருஷ்ணகிரி | 17 | மாலை 4-00 -- 5-00 | No. 4, சென்னை ரோடு. |
| திருப்பத்தூர் N. A. | 18 | காலை 9-00 -- 10-30 | சாரதா மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| வேலூர் N. A. | 18 | மாலை 4-00 -- 5-00 | A. S. A. அண்டு கோ., லாங் பஜார். |
| பெரிய காஞ்சிபுரம் | 19 | காலை 9-00 -- 10-00 | H. மாதவன் அண்டு கோ., ராஜ வீதி. |
| சென்னை | 19 | மாலை 3-30 -- 5-00 | SP. S. S. கெமிஸ்ட்ஸ், பாண்டிபஜார், தி. நகர். |
| சென்னை | 20 | காலை 9-00 -- 11-00 | P. L. R. அண்டு கோ., 68, பெரிய தெரு, திருவல்லிக்கேணி. |
| சென்னை | 20 | மாலை 3-00 -- 5-00 | M/s. அல்லயன்ஸ் கம்பெனி, 156, ராமகிருஷ்ண மடம் ரோடு (மேற்கு மாட வீதி) மைலாப்பூர். |
| செங்கற்பட்டு | 21 | காலை 10-00 -- 11 00 | அம்பீஸ் ஸ்டோர்ஸ், பெரிய செட்டித் தெரு. |
| திண்டிவனம் | 21 | மாலை 3-00 -- 4-00 | ஜெயராம் மெடிகல் ஸ்டோர்ஸ், கடைவீதி (முன்சிப் கோர்ட் எதிர்புறம்) |
| விழுப்புரம் | 21 | மாலை 5-00 -- 6-00 | மீனாட்சி டொபாக்கோ கம்பெனி, திரு. வி. க. ரோடு. |
| திருவண்ணாமலை N. A. | 22 | காலை 8-30 -- 10-00 | பாரத் லாட்ஜ், கிழக்கு ரத வீதி. |
| திருக்கோவிலூர் | 22 | காலை 11-00 -- 12-00 | ஸ்ரீ கிருஷ்ண மெடிகல் ஹால், சன்னதி தெரு. |
| கடலூர் N. T. | 22 | மாலை 4-00 -- 5-30 | மணி பார்மஸி, நேபியர் ரோடு, மஞ்சக்குப்பம். |
| நெய்வேலி | 23 | காலை 8-00 -- 11-00 | ப்ளாக் 13, வைதிக சமாஜம், தீபசாலை. |
| சிதம்பரம் | 23 | மாலை 3-00 -- 4-00 | பாரதிய ஆயுர்வேத அமிர்த நிலையம், கமலேஸ்வரன் கோயில் தெரு. |
| விருத்தாசலம் | 23 | மாலை 5-00 -- 6-00 | K. குப்புசாமி நாயுடு வீடு, கடைவீதி. |
| கள்ளக்குறிச்சி | 24 | காலை 8-30 -- 9-30 | தி மெடிகல் சப்ளைஸ், கடை வீதி. |
| ஆத்தூர் | 24 | காலை 11-00 -- 12-00 | வாஸவி மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| துறையூர் | 24 | மாலை 3-30 -- 5-00 | M. V. மளிகை அண்டு ஷாப், கடை வீதி. |
| பெங்களூர்-3 | 26 | காலை 9-11 | 14, V. கிராஸ் ரோடு, மல்லேஸ்வரம். |
| ,, | | மாலை 3 - 5 | |

குறிப்பு: பிரதி இங்கிலீஷ் மாதம் 10, 25 தேதிகளில் மாலை 3 முதல் 6 மணி வரை எமது வைத்தியர் மயூர வைத்தியசாலை B-11, 1வது கிராஸ், தில்லை நகர், திருச்சி என்ற விலாசத்தில் முகாம் செய்கிறார்.

**ஸ்ரீ சக்தி விலாஸ வைத்தியசாலை,** கரூர் (போன்: 87)
திருச்சி ஜில்லா



# மனிதனும் தெய்வமாகலாம்



அண்ணன் ஆத்திகன்; தம்பி நாத்திகன். இதை அடிப்படையாக வைத்துத் திரைக் கதையைப் பின்னியிருக்கிறார்கள். ஆனால், ஆத்திக, நாத்திக வாதம் அண்ணன், தம்பி சண்டையில் வந்து முடிகிறது. இந்த இரண்டு பாத்திரங்களையும் சிவாஜி ஏற்றுத் தம் இணையற்ற நடிப்பினால் ரசிகர்களுக்கு மன நிறைவைத் தருகிறார். அண்ணனிடம் அன்பையும், பண்பையும், பக்தியையும், பாசத்தையும் பார்க்கும்போது, தம்பியிடம், வீரத்தையும், தீரத்தையும், ஒழுக்கத்தையும், நேர்மையையும் காண முடிகிறது. நடிகர் திலகம், இரு வேறு இயல்புகளையும் அதியற்புதமாக வெளிப் படுத்தி இரு பாத்திரங்களையும் படத்தின் சிறப்பு அம்சங்களாக வழங்கியிருக்கிறார்.

ஆனால் இவ்விரு பாத்திரங்களையும் சுற்றிச் சுழன்று வரும் மற்ற கதா பாத்திரங்கள் ஏனோ திரைக் கதையோடு ஒன்றவில்லை; சில சம்பவங்களும்கூடத்தான், புராணக் கதையா சமூகக் கதையா என்று புரிந்து கொள்ள முடியாமல் குழம்புகின்றன. (மூலக் கதை தெலுங்கு) தெய்வத்தைப் பரிபூரணமாக நம்பும் ஒருவர் தெய்வத்தின் பெயரால் செய்யப்படும் அக்கிரமங்களை ஒப்புக்கொள்ள மறுப்பது, திரைக் கதைக்காக ஏற்படுத்தப்பட்ட நியதியாகத் தெரிகிறது.

அண்ணி சவுகார் ஜானகி, கணவனுக்கும், மைத்துனனுக்கும் இடையில் - கடமைக்கும், பாசத்துக்கும் இடையில் — தவிப்பது உருக்கமாயிருக்கிறது.

உஷாநந்தினி, படத்தின் ஆரம்பத்தில் சுறுசுறுப்பாயிருந்தவர், பிற்பகுதியில் சோர்ந்து விடுகிறார். திரைக் கதையின் தொய்வும் ஒரு காரணமோ?

வி. கே. ராமசாமியின் இரண்டாவது மனைவியாக நடிக்கும் எம். பானுமதியின் நடிப்பு சிறிது நேரமே வந்தாலும் நன்றாயிருக்கிறது. வி. கே. ராமசாமியின் ஹாஸ்ய நடிப்பு நன்றாயிருக்கிறது. எம். ஆர். ஆர். வாசு வில்லன். படம் முழுவதும் அவரது நகைச்சுவையும், அட்டகாசமான நடிப்பும் ஆக்கிரமித்துக் கொண்டிருக்கின்றன. பி. மாதவனின் டைரக்ஷன், பி. என். சுந்தரத்தின் ஒளிப்பதிவு டைரக்ஷன் இரண்டும் படத்தின் சிறப்பு அம்சங்கள். இது ஈஸ்ட்மென் கலரில் தயாரிக்கப்பட்டிருக்கும் வண்ணப் படம். ''பால் பொங்கும் பருவம்'' என்னும் கண்ணதாசனின் பாடல் நன்றாயிருக்கிறது.

நடிப்பிலும், படப் பிடிப்பிலும் சிறந்து விளங்கும் இப்படம் கதை அமைப்பிலும் சிறந்து விளங்கியிருந்தால்....? —காந்தன்

# இந்தியாவின் இந்திரா,



சர்வ வல்லமை படைத்த பிரதமர் பதவியில் உள்ளார் ஸ்ரீமதி இந்திரா காந்தி. எனவே இந்தியாவின் இந்திரா உருவாக்குகிற விதத்திலேதான் இந்திராவின் இந்தியா அமையும். பிரதமரைப் பற்றித் தங்கள் கருத்துக்களைக் கூறுமாறு வாழ்க்கையில் பல மட்டங்களில் உள்ளவர்களைக் கேட்டதில் கிடைத்த எண்ணச் சிதறல்கள் :

**திரு பாலகிஷன் - அச்சுக்கூடத் தொழிலாளி:**

திருமதி இந்திரா காந்தி பிரதமரா பொறுப்பேத்து திறமையா நடத்தறாருன்னு தான் தொழிலாளியான நான் சொல்லு



பாலகிஷன்



தியாகராஜன்

வேன். நம்ம நாட்டிலே எவ்வளவோ பிரச்னைகள் இருக்கத்தான் செய்யுது. அதுலே சில . பிரச்னைகள் தீரலேன்னு சொன்னு அதுக்கு இந்திரா ஜவாப்தாரி யில்லே. கடைக்காரங்க கிராக்கியான சாமான்களைக் கொள்ளை லாபத்தை எதிர் பார்த்துப் பதுக்கிடறாங்க. பதுக்கின சாமான்களைக் கடைக்குப் பின்புறமா நம்மன்னே சில வங்க அதிக விலை கொடுத்து வாங்கிட்டுப் போறாங்க. இது சவங்களோட தப்பு தானே. விலைவாசி ஏர்றதைச் சமாளிக்க ஊதிய உயர்வு கேட்டுத் தொழிலாளிங்க வேலைநிறுத்தம் செய்யறாங்க. அவங்களுக்குச் சம்பள உயர்வு கொடுத்தா அவங்க தயாரிக்கிற சாமான் விலை ஏறுது. விலை ஏறினு தொழிலாளிங்க மறுபடியும் சம்பள உயர்வு கேட்கறாங்க. இது ஒரே இடத்தைச் சுத்தி சுத்தி வர்ற பிரச்னே. 'கரீபி ஹடாவ்'னு (ஏழைமையைத் தவிர்ப்போம்) இந்திரா கூக்குரலிட்டாரு. அவரு ஒண்டியா எப்படி எல்லாப் பிரச்னையையும் தீர்க்க முடியும். பொது மக்களும் இதுக்காக ஒத்துழைக்கணும்.

**திரு தியாகராஜன் - போட்டோகிராபர்:**

பிரதமர் இந்திராவுடைய புகைப்படத்தைப் பிரசுரிக்காத தினசரிப் பத்திரிகைகள் உலகத்திலே வெகு சிலவே இருக்கக் கூடும். என்னைப்போன்ற புகைப்படக் கலைஞர்கள் அவரைப் படம் பிடிப்பதற்கு ஏதுவாக எங்களுக்கு ஒத்துழைப்பு தருகிறார் திருமதி இந்திரா. பாகிஸ்தானுடன் நடந்த சிம்லா ஒப்பந்தத்துக்காகத் திருமதி இந்திரா சிம்லா வந்தபோது அவர் வந்து சேர வேண்டிய நேரம் எங்களுக்குச் சரியாகத் தெரிவிக்கப்படவில்லை. அதனால் அந்த 'ஷாட்'டை 'மிஸ்' பண்ணி விட்டோம். பிறகு சிம்லாவி லுள்ள மால் சதுக்கத்தில் அவர் காரில் வந்து கொண்டிருந்தார். நான் தைரியமாக அவர் கார் முன் சென்று காரை நிறுத்தினேன். 'செக்யூரிடி' ஆட்கள் என்னைத் தடுத்தார்கள். பிரதமர் இந்திரா காரிலிருந்தபடியே 'என்ன வேண்டும்' என்று கேட்டார்.



அம்புஜம் கிருஷ்ணமூர்த்தி



மணி அருள்நந்தி

''மேடம், நீங்கள் சிம்லா வந்து சேருகிற படத்தை 'மிஸ்' பண்ணி விட்டோம்'' என்றேன்.

உடனே காரிலிருந்து இறங்கி மாலில் நடக்கத் தொங்கினார். அது நான் எடுத்த ''பெஸ்டு ஷாட்''. இதுபோல் அவர் படம் எடுக்கறதுக்கு என்னைப் போன்ற போட்டோகிராபர்களுக்கு மிகவும் ஒத்துழைப்புத் தருகிறார்.

மற்றொரு சமயம் அவர் வீட்டில் புகைப்படம் எடுக்கும் போது, ஸஞ்சய் காந்தி, ''என்னை ஏன் படம் பிடிக்கிறீர்கள்?'' என்று எரிந்து விழுந்தார். இதைக் கண்ட பிரதமர் இந்திரா, ''அவன் கோபத்தைத் தயவுசெய்து பொருட்படுத்தாதீர்கள்'' என்று சொல்லித் தம் மகன் தவற்றை உணர்ந்து பெருந்தன்மையாக நடந்து கொண்டார். இது போல் அவரது நற்குணங்களை எடுத்துக் காட்டும்

# இந்திராவின் இந்தியா!




எவ்வளவோ சம்பவங்களைக் கூறலாம். என்னைப் போன்ற போட்டோகிராபர்களுக்கு அவரைப் போட்டோ எடுக்கறதுலே ஒரு தனி குஷி.''

**திருமதி அம்புஜம் கிருஷ்ணமூர்த்தி, தில்லி தென்னிந்திய மாதர் சங்கத் தலைவர்:**

உலகத்திலேயே அதிக ஜனத்தொகையுள்ள ஜனநாயகத்தின் பிரதமராக இந்திரா செயலாற்றுவது பெண் குலம் பெருமைப்பட வேண்டிய விஷயம். அரசியலில் அவர் எடுத்துக் கொண்ட பல தீர்மானங்கள் — பங்களாதேஷ் பிரச்னை, பாங்குகள் தேசியமாக்கப்பட்டது, காபினட் மந்திரிகள் பொறுப்பு மாற்றம் முதலிய பல தீர்மானங்கள் அவரது துணிச்சலையும் ராஜதந்திரத்தையும் எடுத்துக் காட்டுகின்றன. பொதுவாகப் பெண்களுக்கு அவர்களைக் குற்றம் சொன்னால் உடனே தைரியம் குறைந்து அழுகை வந்து விடுகிறது. ஆனால் இந்திரா அரசியலில் எவ்வளவோ எதிர்ப்புக்கள் இருந்தும் அதை எல்லாம் தாங்கிக் கொள்ளும் திறமை படைத்த ஒரு வீரப் பெண். அவர் பத்திரிகையாளர்களுக்கு அளிக்கும் பேட்டியை டெலிவிஷனில் பார்க்கிறோம். நாட்டின் பல பிரச்னைகளை அலசி எடுத்துக் கேள்விகளுக்குப் பதில் அளிப்பதே ஒரு தனி அழகு. ஆனால் அவருடைய நல்ல தீர்மானங்களாலும் ஒரு சில பிரச்னைகள் தோன்றுகின்றன. உதாரணமாக, பாங்குகளில் அவை தேசிய உடைமை ஆக்கப்படுவதற்கு முன் இருந்த வேலைத் திறமை இப்பொழுது காணோம். பிரதமர் இந்திரா நம் நாட்டு மக்களை மட்டுமின்றி அயல்நாட்டினரையும் வெகுவாகக் கவர்ந்திருக்கிறார். நான் சமீபத்தில் ஐந்தாவது சர்வதேச ஆர்பிட்ரேஷன் கவுன்சில் பிரதிநிதிகளின் மனைவிமார்களை இந்திராவைச் சந்திக்க அழைத்துச் செல்ல நேர்ந்தது. பிரதமரைக் கண்டவுடன் அவர்கள் மகிழ்ச்சியில் என்ன பேசுவதென்று புரியாமல் மலைத்துப் போய் நின்றார்கள்.



பாக்கியராஜ்



ஸ்ரீ சங்கர்



வி. ஜி. பன்னீர்தாஸ்

**குமாரி மணி அருள்நந்தி - காலேஜ் மாணவி பொருளாதார ஆனர்ஸ் - இறுதி வகுப்பு:**

''புதுமைப் பெண்'' என்று கவி பாரதியார் கண்ட கனவைப் பிரதமர் இந்திரா நனவாக்கி விட்டார். அவரது அரசாளும் திறமை, விடாமுயற்சி, அண்டை நாடுகளுடன் நல்லுறவு, ராஜதந்திரம், மனோதிடம் ஆகிய நற்குணங்கள் அனைத்தும் உலக மக்களில் பெரும்பாலோரது கவனத்தைக் கவர்ந்திருக்கின்றன. ஆனால் அவரிடம் சில குறைபாடுகளும் இருக்கத்தான் செய்கின்றன. ''கரிபி ஹடாவ்'' என்ற கோஷத்துடன் அளித்த வாக்குறுதிகள் நிறைவேற்றப்படவில்லை. பங்களாதேஷுக்காக உதவியது நம் நாட்டு நலனைப் பாதித்தது. அதன் பலனாக ஏறிய விலைவாசிகள் இறங்கவில்லை. ரயில்வே ஊழியர்கள் வேலைநிறுத்தத்தைத் தகர்த்தெறிந்தார். அதன் அடிப்படையான பிரச்னைகள் இன்னும் தீர்க்கப்படவில்லை. உள்நாட்டுப் பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் கள்ளக் கடத்தல்காரர்கள் பலர் பிடிபட்டார்கள். ஆனால் அதைத் தொடர்ந்து எந்தவித நடவடிக்கைகளும் எடுக்கப்படவில்லை. பி.எஸ்ஸி. பட்டதாரிகள் பண்ணைகளில் வேலை செய்ய முன்வராததும் பட்டதாரியான டாக்டர்கள் கிராமப்புறங்களில் பணிபுரியத் தயாராயில்லாததும் ஏன்? அவர்களுக்குத் தேவையான ஊக்கம் அளிக்கப்படாததுதான் காரணம். இத்தகைய குறைபாடுகளிருந்தும், முன் காலத்தைப் போல் சமூகக் கட்டுப்பாடு அதிகமாக இல்லாமல் பெண்கள் காலேஜ் வரை படித்து நாட்டுக்குச் சேவை செய்யலாம் என்பதற்கு எடுத்துக்காட்டாக விளங்குகிறார் இந்திரா. இது அவரது தவறுகளையும் தோல்விகளையும் மறைத்துவிடுகிறது.

**வி. ஜி. பன்னீர்தாஸ் - தமிழகத்து பிரபல தவணை முறை வர்த்தகர்:**

''மக்களின் வாழ்க்கைத்தரம் உயரணும். அதற்காக எல்லோரும் பாடுபட வேண்டும்'' என்ற சிறந்த எண்ணத்தைக் கொண்டவர்




கிரை (அடகு) அமிர்தமாக இருந்தது அவ்வைக்கு. காரணம் வளையல் அணிந்த கை விசேஷம் என்கிறாள்!

"அட(கு) என்று சொல்லி
அமிர்தத்தை இட்டார்
கடகஞ் செறிந்த கையார்!"

கடகம் செறிந்த கையார் இப்படிப் பலரிடம் நற்சான்றிதழ்கள் பெற வசதியாக ஸ்ரீமதி நிர்மலா தேசிகன் (புகைப்படம்) "இண்டியன் குக்கரி" என்ற பாக சாஸ்திரப் பத்திரிகையொன்று ஆங்கிலத்தில் நடத்துகிறார். அவர் கல்கி மாதர் சிறப்பிதழுக்கு ரசகுல்லா தயாரிக்கும் முறையை விளக்குகிறார்:

**பஞ்சாபி பனீர் தயாரிக்கும் விதம்**

தேவையான பொருட்கள்:

1 லிட்டர் பால்

அரை எலுமிச்சம் பழம்

செய் முறை:

பாலை நன்றாகக் காய்ச்சி, அதில் எலுமிச்சம் பழத்தைப் பிழியவும். திரிந்த பாலை ஒரு மஸ்லின் துணியில் வடிகட்டிக் கொள்ளவும். பின்பு, அந்தத் துணியில் தங்கியுள்ள பனீரை இறுக்கிக் கட்டித் தொங்கவிடவும். சிறிது நேரம் கழித்து இதை எடுத்து நன்றாகப் பிசைந்து பலகாரங்கள் செய்ய உபயோகிக்கலாம்.

**ரஸகுல்லா**

தேவையான பொருட்கள்:

1 கோப்பை பனீர்
2 கோப்பை சர்க்கரை
சில துளிகள் ரோஸ் எஸ்ஸென்ஸ்

செய்முறை:

பனீரை நன்றாகப் பிசைந்து, ஒரே அளவுள்ள உருண்டைகளாக உருட்டிக் கொள்ளவும். இரண்டு கோப்பை சர்க்கரையுடன், அதைப் போல் இரு மடங்கு (4 கோப்பை) தண்ணீர் சேர்த்துக் கொதிக்க வைக்கவும். பாகு கொதித்து வரும்போது, மேலே திரண்டு வரும் அழுக்கினைக் கரண்டியில் நீக்கவும். பின்னர், பனீர் உருண்டைகளை அதில் போட்டு வேக வைக்கவும். அந்தப் பாத்திரத்தை, ஓர் அகலமான ஓரம் கொண்ட தட்டினால் மூடி, அதன் மேல் சிறிது தண்ணீரை வைக்கவும். ரஸகுல்லா மேலே மிதக்கும் வரை, அடுப்பின் சூட்டைக் குறைத்து வேக வைக்கவும். நன்றாக வெந்தபின் அதை இறக்கி வைத்து, ஆறியபின் பரிமாறவும்.

---

நம் பிரதமர் இந்திரா. உலகத்தின் மற்ற நாடுகளை விட அதிகமான ஜனசக்தி நிறைந்த நாடு பாரதம். அரசியலில் இந்திராவுக்குத் துணையாக இருப்பவர்களின் ஒத்துழைப்பு மிகக் குறைவு. தற்சமயம் வேலையில்லாத் திண்டாட்டம் என்ற பிரச்னை நாட்டில் மேலோங்கி நிற்கிறது. அதற்குப் பிரதமர் இந்திரா தனியாக என்ன செய்ய முடியும்? நான் வேலை வாய்ப்புத் திட்டங்கள் சில வைத்திருக்கிறேன். அவற்றைச் செயலாக்கவும் போகிறேன். இதில் எனக்கும் லாபம் இல்லாமல் போகவில்லை. பல பேர் தத்தமது லாபத்தைக் கருதி மற்றவர்களுக்கு வேலை வாய்ப்புத் தரும்போதுதான் நாட்டில் வேலை இல்லாத் திண்டாட்டம் ஒழியும்.

**திரு சங்கர் – கார்ட்டூனிஸ்ட், ஆசிரியர், சங்கர்ஸ் வீக்லி**

இரண்டாண்டுகளுக்கு முன் பிரதமரை வைத்து நான் தீட்டிய ஒரு கார்ட்டூன் இன்றைக்கும் பொருத்தமாகவே இருக்கிறது. அதைப் பிரசுரித்துக் கொள்ளுங்கள்!

(இதனை முன் பக்கத்தில் காணலாம்)

**திரு பாக்கியராஜ் – தமிழ்நாடு பாத்திரக் கடை வியாபாரம், புது தில்லி**

நம்ம நாடு அதிகாரிகளோட ஊழல்லே சிக்கிகிட்டு ரொம்ப திணறுதுங்க. இந்திரா காந்தி என்ன வெல்லாமோ செஞ்சு பார்க்கறாங்க. அவங்களாலே ஒண்டியா என்ன சார் செய்ய முடியும்? நல்ல எண்ணத்தோட பாங்குகளை அரசுடைமை ஆக்கினாங்க. முதன் முதல்லே என்னைப் போல நிறையச் சிறு வியாபாரிகளுக்கு பாங்குகள் கடன் வசதி கொடுத்தது. ஆனால் இப்போ பாருங்க வியாபாரத்துக்குப் பணம் புரட்ட ரொம்ப கஷ்டமாயிருக்கு. விலைவாசி உயருதுன்னு அதுக்கும் பிரதமர் இந்திராவைக் குத்தம் சொல்லி என்ன பிரயோசனம்? இதோ பாருங்க. மெட்ராஸிலேருந்து டில்லிக்கு ஆர்டிக்கல்ஸுலேருந்து வெத்தலை வரை பல பொருள்கள் வருது. அவற்றை ரயிலடியிலேருந்து கடைக்குக் கொண்டாரதுக்குள்ள எவ்வளவு பாடு பட வேண்டியிருக்குது தெரியுங்களா? பலன் சாமான் விலை ஏறுது. அதிகாரிங்க மட்டும் நேர்மையா நடந்துக்கிட்டாங்கன்னு எந்தச் சாமானும் விலை ஏறாதுங்க. மெட்ராஸுக்கு ஒரு டிக்கட் ரிஸர்வ் செய்யறத்துக்கு என்ன பாடுபடுறோம்னு உங்களுக்கே தெரியும். தவிர நாட்டிலே குத்தம் செஞ்சவங்களுக்குக் கொடுக்கிற தண்டனை காணாது. நேர்மையா நடக்காதவங்களைக் கடுமையா தண்டிச்சா நம்ம நாடு கண்டிப்பா முன்னேறிடும்.

பேட்டி: லலிதா

# ஒரே சட்டையில்
# மூன்று சட்டைகளின் நன்மைகள்




இது உங்களுக்கு வியப்பாயிருக்கலாம். ஆனால் 'டெரீன்'® வியப்பூட்டும் நன்மைகள் பல கொண்டது. 'டெரீன்' சட்டை மற்ற சாதாரண சட்டைகளைவிட மும்மடங்கு உழைக்கிறது. அதன் விலை அதிகமாயினும் மூன்று மடங்கு பயனைப் பெறுகிறீர்கள்.

ஆகையினால்தான் 'டெரீன்' ட்ரேட் மார்க்குள்ள துணிகளை வாங்குவதால் லாபமடைகிறீர்கள். 'டெரீன்' துணிகளை பராமரிப்பது எளிது. சலவைச் செலவு இல்லை. இல்லத்திலேயே எளிதில் துவைக்கலாம். மடிப்பு கலையாமல் மனமகிழ்வுடன் அதை அணிகிறீர்கள்.

**துணிமணிகளிலுள்ள 'டெரீன்' ட்ரேட்மார்க் அவற்றின் தரச் சிறப்பை உறுதி செய்கிறது.**

TERENE

® 'டெரீன்' — கெமிக்கல்ஸ் அண்ட் ஃபைபர்ஸ் ஆப் இந்தியா லிமிடெடின் ரெஜிஸ்டர்ட் ட்ரேட்மார்க்

CHAITRA-CAFI-313 TAM

# பொன்னியின் புதல்வர்

சுந்தா

## 28. சென்னையிலிருந்து திருச்செங்கோடு

மயக்கம் நேருகையில்
மருளாத மதி வேண்டும்

ஆனந்த விகடனின் அதிபராய்ச் சுமார் பத்தாண்டுகாலம் தமக்கு ஆதரவு அளிக்கப் போகும் வாசனை, 1928 ஜூலை மாதத்தில் கல்கி சந்தித்தார் அல்லவா? அதற்குச் சுமார் எட்டு மாதங்களுக்குப் பிறகு அவர், நெடுங்காலம் தமக்குச் சகாவாய்த் துணை புரியப் போகும் துமிலனைச் சந்தித்தார்.

துமிலன் என்ற என். ராமஸ்வாமியின் சொந்த ஊர் கும்பகோணம். ஆகவே, அவருக்கும் கல்கிக்கும் ஒரே மாவட்டம் என்ற இணைப்பு. அது மட்டும் அல்ல; கல்கி படித்த அதே மாயவரம் முனிசிபல் பள்ளியில் துமிலனும் படித்தார். அதோடு போயிற்றா? மாயூரம் உதவி கலெக்டர் அலுவலகத்தில் துமிலன் சிறிது காலம் வேலை பார்க்கையில், உத்தியோக முறையில் கல்கியின் அண்ணா, கர்ணம் ராமசாமி அய்யருடன் பழகியவர். இன்னும் ஓர் இணைப்பு: இரு வேறு பத்திரிகைகளில் வேலை செய்து கொண்டிருந்த அவர்கள், ''ஊர்வம்பு'' என்ற ஒரே தலைப்பின் கீழ் எழுதிக் கொண்டிருந்தார்கள்.

இந்த இணைப்பை எல்லாம் அவர்கள், தற்செயலாய் ஒருநாள் கோகலே ஹால் வாசகசாலையில் சந்தித்த பிறகு தெரிந்து கொண்டார்கள். நெடுங்கால நட்பு ஒன்று எப்படித் தற்செயலாகத் தொடங்கக் கூடும் என்பதற்கு ஓர் உதாரணம் அது.

அந்தச் சந்திப்பு பற்றியும், அதிலிருந்து அவர்களிடையே தொடர்ந்த கூட்டுறவு பற்றியும் கூறும்படி துமிலனைக் கேட்ட போது, அவர் கொஞ்சம் சொல்லியபின், அதையெல்லாம் கோவையாக ஒரு கட்டுரையில் எழுதியிருப்பதாகச் சொல்லி அதை எடுத்துக் கொடுத்தார்.

அதிலிருந்து ஒரு பகுதியைப் பார்ப்போம் :

என்னெதிரில் உட்கார்ந்திருந்த ஒருவர், ''என்ன ஸார், மணி ஆகிறது?'' என்று கேட்டார். நான் ''நாலரை'' என்று மணியைத் தெரிவித்துவிட்டு, ''நீங்கள் கிருஷ்ணமூர்த்தியா ? நவசக்தியில் 'தமிழ்த்தேனீ' என்று எழுதுகிறவர் நீங்கள்தானே?'' என்று விசாரித்தேன். அவர் கதர் தரித்திருப்பார், சற்றுக் கீச்சுக் குரலில் பேசுவார் என்று அவரைப் பற்றி யாரோ சொன்னது ஞாபகம் இருந்தது. அதனால் அப்படிக் கேட்டேன்.

''ஆமாம், நீங்கள்?'' என்று, அவர் என்னைக் கேட்டார். ''ராமஸ்வாமி. நானும் இல்லாம் பத்திரிகையில் 'ஊர் வம்பு' என்ற தலைப்பில்.....'' என்று ஆரம்பித்தேன். ''ஓ ! அது நீங்கள்தானா? ரொம்ப நாளாக உங்களைப் பார்க்க வேண்டுமென்பது. அகப்பட்டுக் கொண்டீர்கள்!'' என்றார். ''நீங்களும் என்னிடம் சிக்கிக் கொண்டீர்கள்'' என்று



நானும் சொல்ல, இரண்டு பேரும் சிரித்தோம். அவர் கையிலிருந்த 'மாடர்ன் ரெவ்யூ' பத்திரிகையைக் கீழே போட்டுவிட்டு எழுந்திருந்து என்னிடம் வந்து, கையைப் பிடித்துக் கொண்டு ''வாருங்கள் போகலாம்'' என்றார்.

நாங்கள், எங்கள் ஊர், பிறப்பு, வளர்ப்பு முதலியவற்றைப் பற்றி விவரமாகப் பேசிக் கொண்டே போனோம். நாங்கள் இருவரும் எங்கள் வீட்டுக்குச் சென்று கொண்டிருந்தோம். போகும் வழியிலேயே எங்கள் சம்பாஷணை, சம்பிரதாய முறையிலிருந்து நெருங்கிய முறைக்கு மாறிற்று. எங்கள் வீட்டு வாசலை அடையுமுன் நாங்கள் நண்பர்களாகி விட்டோம்.

பிறகு வீட்டில் ஒரு கப் காப்பி சாப்பிட்டுக் கொண்டே எங்கள் நட்பை ஊர்ஜிதப் படுத்திக் கொண்டோம். உடனேயே அவர் என்னைத் தம் வீட்டுக்கு அழைத்துச் சென்றார். மறு நாள் எனக்கு அவர் வீட்டில் விருந்து.

அன்று மாலை நாங்கள் கடைத் தெருப் பக்கம் சென்றபோது, அவர் ஒரு கதர்க் கடைக்குள் நுழைந்தார். அரைக்கு வேஷ்டி

யும் ஒரு துண்டும் வாங்கிக் கொடுத்து, ''இனி மேல் நீங்கள் கதர்தான் கட்ட வேண்டும்'' என்றார். அப்போது நான் இடுப்பில் 1703–ம் நம்பர் மல் துணி கட்டி, மேலே பாப்ளின் துணி ஷர்ட் போட்டிருந்தேன். அன்றிலிருந்து நான் கதர் தரிக்க ஆரம்பித்தேன்..

அவர் ஒருநாள், ''ஆனந்த விகடன் என்று ஒரு மாதப் பத்திரிகை இருக்கிறதே, அதற்கு நான் கதை எழுதுகிறேன். நீங்களும் ஏதாவது எழுதிக் கொடுங்கள்'' என்றார். அவர் 'ஏட்டிக்குப் போட்டி!' என்ற தலைப்புடன் எழுதியிருந்த கட்டுரையை எடுத்துப் படித்துக் காண்பித்தார். அதை நான் கேட்டு விட்டுச் சிரித்தேன்.

''அன்று மாலை நாங்கள் கடைத்தெருப் பக்கம் சென்றபோது கல்கி ஒரு கதர் கடைக்குள் நுழைந்தார். அரைக்கு வேஷ்டியும் ஒரு துண்டும் வாங்கி என்னிடம் கொடுத்து, 'ராமஸ்வாமி! நீங்கள் இனி மேல் கதர்தான் கட்ட வேண்டும்' என்றார்.''



கோல்ட் ஸ்மித்தின் 'விக்கார் ஆப் வேக்பீல்டு', டிக்கென்ஸின் 'பிக்விக் பேப்பர்ஸ்' முதலிய ஆங்கிலப் புத்தகங்களைப் படித்துச் சிரித்த பிறகு, தமிழில் ஒரு கதையைப் படித்துச் சிரிக்க முடியும் என்று நான் எதிர்பார்க்க வில்லை.

நான் கொஞ்சம் எழுதத் தயங்கிய போது, எழுதித்தான் ஆக வேண்டும் என்று அவர் சிநேக முறையில் கட்டாயப்படுத்திச் சொன்னார். அவரைத் திருப்திப்படுத்துவதற்காக 'பி. ஏ. தேவை!' என்ற தலைப்புடன் ஒரு சின்னஞ்சிறு கதை எழுதிக் கொடுத்தேன். அதுதான் எனது முதல் கதை.

அவர் என்னை ஸ்ரீ எஸ். எஸ். வாஸனிடம் அழைத்துச் சென்று அறிமுகப்படுத்தி வைத்தார். அந்தக் கதை பிரசுரமாயிற்று. அதற்குப் பிறகு மாதா மாதம் எழுத வேண்டும் என்று வற்புறுத்தினார்.....

(தினமணி கதிர் 12-12-54)





காந்தி ஆசிரமத்தின் அன்றைய ஒரு தோற்றம். சுற்றுப்புறக் கிராமங்களில் தயாராகி வரும் கதரின் தரம் சரியாக இருக்கிறதா என்று பார்க்கப்படுகிறது.



'காந்தி ஆசிரமத்தில் சந்தானம் இருக்கிறார். உன்னைப் பார்த்துக் கொள்வார்'' என்றார் ராஜாஜி, கல்கியிடம்.

''ரொம்ப நாளாக உங்களைப் பார்க்க வேண்டுமென்பது - அகப்பட்டுக் கொண்டீர்கள்!'' என்றார் 'கல்கி', 'துமிலன்'னைப் பார்த்து. வெகு நாட்களுக்கு முந்தைய படத்தில் துமிலன், மனைவியுடனும் அருமை மகளுடனும் காணப்படுகிறார்.

துமிலனை இவ்வாறு ஆனந்தவிகடனுக்குக் கல்கி எழுதச் செய்ததிலிருந்து, அந்தப் பத்திரிகையின் மீது அவர் அசாதாரண அக்கறை கொண்டிருந்தார் என்பது புலனாகிறது. உண்மையில் அவருக்கு நவசக்தி வேலையில் மன நிறைவு இல்லை; ஆரம்பத்தில் கொண்ட ஆர்வம் குன்றிப் போய்விட்டது. அதை விட்டுவிடலாம் என்று சிறிது காலமாகவே எண்ணிக் கொண்டிருந்தார். அதற்குத் தூண்டுதல் அளிப்பது போல், வாசன், அவருடைய எழுத்துத் திறமை ஆனந்த விகடனுக்கு மிகவும் ஏற்றதாய்

இருக்கிறது என்றும், தம்முடன் அவர் சேர்ந்து கொண்டால் நன்றாய் இருக்கும் என்றும், அவரைச் சந்தித்த போதெல்லாம் சொல்லிக் கொண்டிருந்தார்.

என்ன செய்வதென்று சில வாரங்கள் யோசித்த பிறகு, ஆனந்தவிகடனில் ஒரு வேலை சேர நேர்ந்தால், அதற்கு வசதியாய்ச் சுயேச்சை நிலையில் இருக்கலாம் என்று அவர் நினைத்து, நவசக்தியை விட்டு விலகத் தீர்மானித்தார். பின்னர் மிக்க தயக்கத்துடன் அதைத் தமது ஆசிரியரிடம் தெரிவித்தார் :

நான் விலகிக் கொள்ள விரும்புவதாகத் திரு வி. க.விடம் தெரிவித்தபோது, அவரால் அதை நம்ப முடியவேயில்லை. வியப்பும் வருத்தமும்கூட அடைந்தார். விலகிக் கொள்ள விரும்புவதற்குக் காரணம் கேட்டதுடன், ''இங்கு ஏதாவது குறை உண்டா ?'' என்றும் விசாரித்தார்.

உண்மை என்னவென்றால், ''நவசக்தி'' காரியாலயத்தில் எனக்கு ஒரு குறையும் இருக்கவில்லை. எந்தப் பத்திரிகாலயத்திலும் ஓர் உதவி ஆசிரியருக்கு அவ்வளவு உரிமையும் மரியாதையும் அளிக்கமாட்டார்கள் என்பதை நன்கு அறிந்திருந்தேன். ''நவசக்தி''யில் நான் செய்த தொண்டு எனக்கே அவ்வளவு திருப்தி அளிக்காததுதான் நான் விலகிக் கொள்ள விரும்பியதற்குக் காரணம். பெரும்பாலும் மொழிபெயர்ப்பு வேலைதான் ''நவசக்தி''யில் நான் செய்ய நேர்ந்தது. திரு வி. க.வின் தமிழ் நடையை என்னால் கையாள முடியவில்லை. என்னுடைய நடையில் நான் சொந்தமாக எழுத முயன்ற விஷயங்கள் ''நவசக்தி''க்குப் பொருத்தமாக அமையவில்லை. இதனால் என் மனம் அமைதியை இழந்துவிட்டது. அதன் பிறகு 'நவசக்தி'' யில் இருப்பது திரு வி. க.வின் அன்பைத் தவறாக உபயோகப்படுத்திக் கொள்வதாகும் என்று கருதினேன்.

இதையெல்லாம் இவ்வளவு பட்டவர்த்தனமாக அப்போது திரு வி.க.விடம் சொல்லவும் முடியவில்லை. ''என்னமோ, மனம் அமைதி இழந்திருக்கிறது. ஆகையினால்தான் விலக விரும்புகிறேன். வேறு ஒரு குறையும் கிடையாது'' என்று வற்புறுத்திக் கூறினேன்.

சில தினங்கள் இவ்விதம் விவாதம் நடந்த பிறகு, கடைசியாக ஒரு நாள், திரு வி. க. கூறினார்:

''இதோ பார்! உன்னைப் போகச் சொல்ல எனக்கு விருப்பமில்லை. நீயோ பிடிவாதம் பிடிக்கிறாய். உன்னைப் போல் சிலர் அவசரப்பட்டு ஒரு காரியம் செய்துவிட்டுப் பிறகு வருத்தப்படுவதும் உண்டு. அதற்கு இடமில்லாமல் செய்து கொள்வோம். உன்னுடைய ஸ்தானத்தை இன்னும் ஆறு மாதத்துக்குக் காலியாக வைத்திருக்கிறேன். இந்த ஆறு மாதத்துக்குள் நீ எப்போது வேண்டுமானாலும் திரும்ப வந்து சேர்ந்து கொள்ளலாம். ஆறு மாதத்துக்குப் பிறகு உன்னைக் கேட்டுவிட்டு வேறொருவரை நியமித்துக் கொள்கிறேன்.''

திரு வி. க.வின் இந்தப் பேரன்பும் பெருந்தன்மையும் என்னைப் பேச்சு மூச்சில்லாமல் அடித்துவிட்டன. உள்ளம் உருகிக் கண்ணீரும் துளித்துவிட்டது. ஒரு கணம், ''நான் போகவே இல்லை'' என்று சொல்லிவிடலாம் என்று தோன்றியது. பிறகு, ''பார்த்துக் கொள்ளலாம்; ஆறு மாதத் தவணைதான் கொடுத்திருக்கிறாரே ?'' என்று தீர்மானித்தேன். அவருக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்து விடைபெற்றுக் கொண்டேன்.

**(கல்கி இதழ் 10-8-'43)**

இப்படி விடைபெற்றுக் கொண்டு வீட்டுக்குப் போன கல்கி, ''நவசக்தி வேலையை விட்டுவிட்டேன்'' என்று மனைவியிடம் தெரிவித்தார். அவள் திகைத்துப் போய் நின்றதைக் கண்டு, ''ஏன் என்று நீ கேட்காவிட்டாலும், நான் சொல்கிறேன்'' என்றார். ''என்னென்னமோ எழுத வேண்டும் என்றெல்லாம் நான் ஆசைப்படுகிறேன். அதற்கு அதில் வாய்ப்பில்லை. என்னை விடுவிப்பதற்கு முதலியாருக்கு இஷ்டமில்லை ; அவரை விட்டு விலகுவதற்கு எனக்கும் வருத்தமாய்த்தான் இருக்கிறது. ஆனாலும் வேறு வழியில்லை. ஒரு மாறுதல் வேண்டும் என்று தோன்றிவிட்டது.''

''வேறே எங்கேயாவது வேலை தேடப் போகிறீர்களா ?''

''தேடணும். தேடத்தான் வேணும். ஆனால் எங்கே என்றுதான் தெரியவில்லை. எப்படியும் ஒரு வழி உண்டாகாமல் போகாது. என் கட்டுரைகளை ஆனந்த விகடன் வாசன் விரும்பிப் போடுகிறார். இன்னும் நிறைய எழுதச் சொல்கிறார். ஒருவேளை அவரே என்னை வேலைக்கு எடுத்துக் கொள்ளலாம்.''

''அதுவோ, வேறே எதுவோ கிடைக்கிற வரை என்ன செய்கிறது?''

''கவலைப்படாமல் நிம்மதியாய் இருக்கிறது ! கையிலே மூந்நூறு ரூபாய் இருக்கிறது. அதை வைத்துக்கொண்டு நாலைந்து மாதம் காலம் தள்ளலாம்.''

அப்படிச் சொல்லிவிட்டு அவர், காப்பி போடச் சொல்லிச் சாப்பிட்டுவிட்டு, உற்சாகத்துடன் கைப் பெட்டிக்கு முன்னே உட்கார்ந்து ஆனந்த விகடனின் அடுத்த இதழுக்கு ஒரு கட்டுரை எழுதத் தொடங்கினார்.

மறுநாள், ஸ்ரீ சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் சென்னை மாநகருக்கு வந்திருப்பதாகப் பத்திரிகைகளில் படித்து அறிந்தேன். (தினப் பத்திரிகைகளில் போக்குவரவு செய்திகளை வெளியிடுகிறார்களே, அவர்கள்... வாழ்க !) திருச்செங்கோட்டிலிருந்து பம்பாய்க்குப் போகும் மார்க்கத்தில், சென்னை

# மலர்களிலே அவள் மல்லிகை!




மலர்களின் ராணி, மல்லிகை!
இளமைப் பூங்காவில் பூரிப்புடன்
பூத்துக் குலுங்கும் இந்த
இளமங்கை, அழகு
ராணியாகத் திகழ்கிறாள். அந்த
புத்தெழில் என்றுமே நிலைத்திட
அவள் ஜெய் அழகு சாதன சோப்
உபயோகிக்கிறாள். மல்லிகை மணம்
வீசும் ஜெய் சோப் மேனியை
மிருதுவாக்கி, பொன்னொளி
வீசச் செய்கிறது.

மல்லிகை
மணம் கமழும்

**ஜெய்**

அழகுசாதன
சோப்

டாடா தயாரிப்பு

OBM.7002 TM

யில் இறங்கி, ஒரு சிநேகிதர் வீட்டில் தங்கியிருப்பதாகத் தெரிந்தது. "இதென்ன, காக்கை உட்கார்ந்ததும் பனம் பழம் விழுந்ததும் சரியாய் இருக்கிறதே?" என்று எண்ணிக் கொண்டே ஸ்ரீ ஆசாரியாரைப் பார்க்கப் போனேன்.... ஸ்ரீ ஆசாரியார் என்னைப் பார்த்து, "முன்னொரு தடவை சொன்னேனே நினைவிருக்கிறதா? மதுவிலக்குப் பத்திரிகை ஒன்று ஆசிரமத்தில் தொடங்கப் போகிறேன். மூன்று மாதத்துக்குள் வர முடியுமா?" என்று கேட்டார். "மூன்று மாதத்துக்குள் வர முடியாது; இன்றைக்கே வர முடியும்!" என்று பதில் சொன்னேன். "அதெப்படி?" என்று கேட்டார்.

"நவசக்தி"யை நான் விட்டுவிட்ட விவரத்தைச் சொன்னேன்.

ஆச்சாரியார் ஐந்து நிமிஷம் கோபமாயிருந்தார். அம்மாதிரி சஞ்சல புத்தி உதவாது என்று கண்டித்தார். பிறகு, "போனது போகட்டும்; பட்டணத்தில் வேலை இன்றிச் சும்மா திரியக் கூடாது; கெட்டுப் போவாய்; இரண்டு நாளைக்குள் ஆசிரமத்துக்குப் புறப்பட்டுவிடு! அங்கே சந்தானம் இருக்கிறார். உன்னைப் பார்த்துக் கொள்வார். நான் வடக்கே இருந்து திரும்பி வந்ததும் பத்திரிகையைப் பற்றி யோசிக்கலாம்" என்று கூறினார்.

எனக்கு ஏற்பட்ட குதூகலத்தைச் சொல்லி முடியாது. ஆயினும் குதூகலத்தை அதிகமாகக் காட்டிக் கொள்ளாமல், "அதற்கென்ன? அப்படியே செய்கிறேன்" என்று சொல்லி விடைபெற்றுக் கொண்டேன்.

("பாங்கர் விநாயக ராவ்" முன்னுரை)

குதூகலத்தில் குதி நடை போட்டுத் தங்கசாலைத் தெருவுக்குச் சென்று, ஆனந்தவிகடன் அலுவலகத்தில் வி. பி. பார்ஸல்களிடையே திணறிக் கொண்டிருந்த வாசனைக் கண்டார். கையுடன் கொண்டு வந்திருந்த கட்டுரையை அவரிடம் கொடுத்துவிட்டு, முதல் நாள் தாம் நவசக்தியைவிட்டு விலகியதையும், சற்று முன் ராஜாஜியைக் கண்டு திருச்செங்கோட்டுக்குச் செல்ல ஒப்புக் கொண்டதையும் உற்சாகமாய்த் தெரிவித்தார்.

அந்தச் செய்தி வாசனுக்கு உற்சாகம் அளிக்கவில்லை. வெளிப்படையாகவே தமது ஏமாற்றத்தை அவர் தெரிவித்தார். "நவசக்தியை விட்டு விலகியது ரொம்ப சரி. ஆனால் நேரே நம்ம ஆனந்தவிகடனில் வந்தல்லவா சேர்ந்திருக்க வேண்டும்?"

"அப்படித்தான் நானும் நினைத்திருந்தேன். ஆனால் தற்செயலாய் ஆச்சாரியார் இங்கே வந்ததில், நான் நினைத்தது மாறிப் போச்சு!"

"கட்டாயம் அங்கே போகத்தான் வேண்டுமா?"

"கட்டாயமாய். நான் ஒப்புக் கொண்டு விட்டேன் என்பதற்காக அல்ல. நான் கொண்டாடும் தலைவரிடம் வேலை செய்வது ஒரு பாக்கியம். சாதாரணமாய்க் கிடைக்காத பாக்கியம். அதற்காகத்தான் போகிறேன்."

"நீங்கள் எனக்கு உதவியாய் வருவீர்கள் என்று நம்பிக் கொண்டிருந்தேன். இப்போது நம்ம பத்திரிகையின் விற்பனை பெருகிப் போச்சு. இதில் வருகிற விளம்பரத்தினாலே இந்த வி.பி.பி. வியாபாரமும் ரொம்பப் பெருகிப் போச்சு. என் மாமா உதவி செய்தும் சமாளிக்க முடியவில்லை. பத்திரிகை எடிட்டிங் பொறுப்பை உங்களிடம் ஒப்படைக்கலாம் என்றிருந்தேன். இப்போது என்ன செய்ய?"

கல்கி கொஞ்சம் யோசித்துவிட்டுத் துமிலனை அந்தப் பொறுப்புக்குச் சிபாரிசு செய்தார். "நான் திருச்செங்கோட்டுக்குப் போய்த் தீர வேண்டும். அங்கே இருக்கிறவரை இருந்துவிட்டுப் பிறகு இங்கே வந்துவிடுகிறேன். அதுவரை துமிலன் பத்திரிகையைக் கவனித்துக் கொள்ளட்டும். தாருல் இஸ்லாமிலிருந்து அவர் உடனே விலகி வந்துவிட முடியும்."

அதற்கு வாசன் இணங்கினார்.

"நீங்கள் திருச்செங்கோட்டிலிருந்தபடியே கதை கட்டுரைகள் அனுப்பிக் கொண்டிருக்க வேண்டும்."

"கட்டாயம் அனுப்புகிறேன்" என்று கல்கி வாக்களித்தார்.

"ஒவ்வொரு இதழுக்கும் ஒரு கதை அல்லது கட்டுரை. அதோடு ஒரு தலையங்கம்."

"தலையங்கம்கூடவா?" என்று கல்கி வியப்புடன் கேட்டார்.

"ஆமாம். அதற்கு நீங்களே விஷயத்தைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். அதையும் கட்டுரையையும் சேர்த்து, எழுபத்தைந்து ரூபாய்க்கு வி.பி.பி.யில் அனுப்பிவிடுங்கள்."

"வி.பி.பி.யில் எதற்காக?"

"அப்போதுதான் நீங்கள் அனுப்புவது பத்திரமாய் வந்து சேரும். எனக்கும், தனியாக மணியார்டர் செய்ய வேண்டிய வேலை இராது."

வெளியிலிருந்தபடி தலையங்கம் எழுதுவது! வி.பி.பி.யில் அனுப்புவது! கேள்விப் படாத விந்தையாயும் வேடிக்கையாயும் இருந்தது. மனத்துக்குள் சிரித்துக் கொண்டார் கல்கி. ஆனால், அடுத்த கணமே, தமது திறமையை அவ்வளவு தூரம் வாசன் மதிக்கிறார் என வைத்துக் கொள்ளலாமே என்று நினைத்தார். தம் மீது அவ்வளவு நம்பிக்கை அவருக்கு! தாம் என்ன அனுப்பினாலும், அதைப் படித்துப்

பாராமலே பணம் கொடுத்து ஏற்கத் தயாராய் இருக்கிறார். மனத்தில் பெருமை உணர்ச்சி பொங்கிற்று. ''உங்கள் விருப்பப்படியே தவறாமல் செய்கிறேன்'' என்று சொல்லிவிட்டு, வாசனிடம் விடைபெற்றுக் கொண்டார்.

(விரைவிலேயே தமிழ்வாணன் ஆனந்த விகடனில் உதவி ஆசிரியராக நியமனமாகி, அதன் பதிப்புப் பொறுப்பை வகித்தார்.)

''எப்பேர்ப்பட்ட மனிதர் வாசன்!'' என்று வியந்து கொண்டே வீடு திரும்பிய கல்கி, மனைவியிடம், ''நல்ல செய்தி'' என்று தொடங்கி எல்லாவற்றையும் சொன்னார். அவருடைய சுபாவத்தை அதற்குள் நன்கு அறிந்திருந்த ருக்மிணி, குறுக்கே பேசாமல் கேட்டாள்.

''ஒரு வாரத்துக்குள் புறப்பட்டுவிட வேண்டும். இப்போதே சொல்லிவிடுகிறேன். நாம் இருக்க வேண்டிய இடம் ஓர் ஆசிரமம். குடிசையில்தான் வசிக்க வேண்டும். ஆயிரம் ஆயிரமாய்ச் சம்பாதித்த ஆச்சாரியாரும் ஒரு குடிசையில்தான் இருக்கிறார்.... நிஜமாகவே, இங்கேவிட அங்கே மேலாகத்தான் இருக்கும். இந்தப் பட்டணத்து இரைச்சலும் நாற்றமும் அங்கே கிடையாது. எளிய வாழ்க்கை ஆனந்தமாய் இருக்கும்.''

பயணமாவதற்கு இரண்டு நாட்களுக்கு முன்னால், நவசக்தி ஆசிரியருக்குக் கல்கி வீட்டில் விருந்து நடந்தது. கணவரின் யோசனைப்படி ருக்மிணி சித்திரான்னங்கள் செய்திருந்தாள். அவற்றைத் திரு. வி. க. பாராட்டிக் கொண்டே உண்டார். உண்கையிலேயே, கல்கிக்கு நல்வாழ்த்துக் கூறினார். ''ஆச்சரியாரிடம் பணி செய்யப் போவது பெரும் பேறு'' என்றார். ''நாட்டுப் பணியிலும் இலக்கியப் பணியிலும் நீங்கள் சிறப்பீர்கள். உங்கள் இருவரையும் எம்பெருமான் காத்தருள்வார்.''

கல்யாணசுந்தரனார் வாழ்த்தியது போலவே, ஆச்சாரியாரிடம் கல்கி செய்த பணி பெரும் பேறாகவே அமைந்தது. வாழ்நாள் முழுதும் அந்த அருந்தலைவருடன் மனம் ஒன்றி, புகையிலும் புயலிலும், பூவிரித்த பாதையிலும் புகழ்வீசும் அரங்கிலும் அவரைத் தொடர்வதற்கு அது வகை செய்தது.

பின் நிகழப் போவதை முன்னேயே அறிய முடிந்தது போல், திருச்செங்கோட்டை நோக்கிய பயணத்தின் போது, கல்கியின் உள்ளத்தில் உணர்ச்சி அலைகள் மோதின. அந்த உணர்ச்சியை எடுத்துக் காட்டும் விதத்தில், பயணத்தின் இறுதிப் பகுதி பற்றிய அவருடைய வர்ணனை அமைந்திருக்கிறது — மிகச் சாதாரணமாய்த் தொடங்கி:

சங்கரி துர்க்கம் ஸ்டேஷனில் இறங்கித் திருச்செங்கோட்டுக்கு ஐந்து மைல் பஸ்ஸில் போக வேண்டும். திருச்செங்கோட்டிலிருந்து ஏழு மைல் குதிரை வண்டியிலோ மாட்டு வண்டியிலோ போக வேண்டும். பழைய குதிரை வண்டி அநுபவத்தை ஞாபகப்படுத்திக் கொண்டு, மாட்டு வண்டியிலேதான் போனேன். (போனோம் என்றே வைத்துக் கொள்ளலாம், உடன் சென்ற மனைவியையும் சேர்த்து!)

மாட்டு வண்டி அவசரப்படாமல் நிதானமாக ஆடி அசைந்து கொண்டு சென்றது. சாலையின் இரு பக்கமும் புன்செய் நிலக் காடுகள். சில இடங்களில் மொட்டைப் பாறைகள். ஓர் இடத்தில் பெரிய பனந்தோப்பு. அதில் சுமார் ஆயிரம் பனை மரங்கள் இருக்கும்.....

மனசுக்கு அவ்வளவு உற்சாகம் அளிக்கக் கூடிய காட்சிகள் அல்ல; கண்ணுக்கினிய காட்சிகளும் அல்ல. ஆனாலும் மனசு என்னமோ பிரமாத குதூகலத்தை அநுபவித்துக் கொண்டிருந்தது. பனை மரங்களுக்கெல்லாம் மேலே பறந்து, பறந்து, பறந்து வானவெளியிலே உல்லாசமாக உலாவிற்று. ஆகா! இந்த மனசின் பொல்லாத்தனத்தை என்னவென்று சொல்ல? ஆகாச விமானத்தில் பதினாயிரம் அடி உயரத்தில், மணிக்கு இருநூறு மைல் வேகத்தில் பிரயாணம் செய்யும் போது இந்த மனசு, பூமியில் ஒரு சின்ன வீட்டில் சின்ன அறையில் குப்புறப் படுத்துக் கொண்டு அசைய மாட்டேன் என்கிறது! ஆனால் பட்டிக்காட்டுச் சாலையில் கட்டை வண்டியில் உட்கார்ந்து செல்லும்போது, மனசு வான வெளியில் உயர உயரப் பறந்து நட்சத்திர மண்டலங்களை க்ஷேமம் விசாரித்துவிட்டு வருகிறது! அடடா! நம்முடைய மனசே மனசுதான்!

''அதோ தெரிகிறதே தோப்பு, அதுதான் புதுப் பாளையம்! அந்தத் தோப்பிலேதான் ஆசிரமம் இருக்கிறுங்க!'' என்றான் வண்டிக்காரன். காந்தி ஆசிரமத்தைப் பற்றித்தான் அப்படி மரியாதையாகப் பேசினானோ, அல்லது ஆச்சாரியாரை நினைத்துக் கொண்டுதான் சொன்னானோ தெரியாது.

ஆசிரமத்தை நெருங்க நெருங்க உற்சாகம் அதிகமாயிற்று. என் வாழ்க்கையில் ஒரு புதிய அற்புதமான அத்தியாயம் ஆரம்பமாகப் போகிறது என்ற உணர்ச்சி உள்ளத்தில் ததும்பிக் கொண்டிருந்தது. வண்டியிலிருந்து குதித்து ஓடலாமா என்று தோன்றியது.

அவ்விதமெல்லாம் மனசில் ஏற்பட்ட உற்சாகம் பொய்யாகப் போய்விடவில்லை. திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்தில் நான் வசித்த மூன்று வருஷந்தான் என் வாழ்க்கையிலேயே உற்சாகமும் குதூகலமும் நிறைந்திருந்த காலமாகும். **(மேற்படி)** (தொடரும்)



# இதோ ஓர் ஆல்ரவுண்டர்!

பதினான்கு வருஷங்களுக்குக் காட்டுக்குச் செல்லும் ராமனிடம் சீதை தன்னையும் அழைத்துப் போகுமாறு கெஞ்சுகிறாள். இதைக் கோமளா நடனத்தினிடையே அபி நயித்த போது ரசிகர்களில் ஒரு பெண்மணி விசித்து விசித்து அழுதது, அவையிலிருந்த அத்தனை பேருக்கும் கேட்டு அவர்களை மெய் யுருக வைத்தது.

சிங்கப்பூரில் நிகழ்ந்த சம்பவம் இது.

தமிழ்நாட்டில் மியூசிக் அகாடமி போல் சிங்கப்பூரில் சைனு சொஸைட்டி கலைகளையும் கலைஞர்களையும் கௌரவிக்கும் ஸ்தாபனம். அந்தக் கழகத்தில் சைனாக்காரர்களைத் தவிர யாரும் இதுவரையில் கலைநிகழ்ச்சி நடத்திய தில்லை. அங்கே பரதக்கலையை அரங்கேற் றும் பெருமை ஸ்ரீமதி கோமளா வரதனுக்கு அவர் குமாரி கோமளாவாக இருந்தபோது கிடைத்தது.

கல்கத்தா சர்வகலாசாலையில் பி. ஏ. பட்டதாரி; 'குலபதி பதக்கத்'துடன் பாரதீய வித்யாபவனின் பத்திரிகைத் தொழில் டிப் ளோமா பெற்றவர். டெக்கான் ஹெரால்டு இவரது ஆற்றலுக்குப் பதக்கம் வழங்கிக் கௌரவித்திருக்கிறது!

கோமளா முறைப்படி பரதநாட்டியத்தைச் செய்யூர் திருவேங்கட நட்டுவனாரிடமும், வழுவூர் ராமையாப் பிள்ளையிடமும், கௌரி அம்மாளிடமும் பயின்றவர். மணிபுரி நடன மும் கற்றுக் கொண்டார்.

''திருமணம் ஆன பிறகு எனது நாட்டியக் கலைக்கு முற்றுப்புள்ளி விழுந்து விடுமோ என்று பயந்தேன்! என் கணவர், 'கோமளா! நீ நடனத்தை விட்டுவிட வேண்டாம்! உன் நடனத் துக்கு நான் 'பின்பாட்டு பாடினால்' யாரும் குறை சொல்ல மாட்டார்கள்!' என்று கூறி உற்சாகப் படுத்தினார். அவர் தூண்டு கோலின் விளைவாக நான் புகைப்படக் கலையிலும் பெயிண்டிங்கிலும் கவ னம் செலுத்தினேன்!'' என்கிறார் ஸ்ரீமதி கோமளா வரதன்.

இவரது வண்ண ஓவியங்கள் மூன்று பெங்களூர் ராஜ் பவனை அலங்கரிப்பது இவ ரது சித்திரக்கலையின் சிறப்பை மிகத் துலாம்பரமாக எடுத் துக் காட்டுகிறது.

''எனது புகைப்படக் கலைத் தேர்ச்சிக்கு என் கணவர் எடுத் துக் கொள்ளும் சிரத்தை இவ்வ ளவு அவ்வளவல்ல! கம்போடியாக் காடுகளில் பல நாட்கள் என் கணவர் நான் இழுத்த இழுப்புக்கெல்லாம் வந்து படம் எடுக்கத் துணையிருந்தது என்னால் மறக்கமுடியாத நினைவு! என் வெற்றியில் அவருக்குப் பூரண பங்குண்டு!'' என்று அன்பு பொங்கச் சொல்கிறார் கோமளா.

சிறுகதைத் துறையிலும் ஸ்ரீமதி கோமளா வரதன் ஈடுபட்டிருக்கிறார். ''இருபது வருஷங் களுக்கு முன்னால் என் அம்மாவின் மூக்குத்தி கெட்டுப் போச்சு. அதிர்ஷ்டவசமா ஒரு வெள்ளிக்கிழமையன்று அந்த மூக்குத்தி திரும் பக் கிடைச்சது! எனது முதல் கதைக்கு 'வித்து' இதுதான்!'' என்கிறார் சிறுகதை ஆசிரியை கோமளா வரதன்.

அண்மையில் சென்னை, ஜவஹர்லால் நேரு இளைஞர் சங்கம் 'கோமளா வரதன் நாள்' ஏற்பாடு செய்திருந்தது.

''எனக்கு வீட்டு நிர்வாகம்தான் முக்கிய கடமை. நடனம், சித்திரம், புகைப்படக் கலை, சிறுகதை எழுதுதல் அனைத்துமே பொழுது போக்குகள்!'' என்கிறார் இந்த ஆல்ரவுண்டர்!

— பி.எஸ்.எம்.

### முத்துமாரி திருமணம்!

பாக்தாத்தின் காலீஃப் திரு மாமூன், மாபெரும் மந்திரியின் பெண் பூரானை மணந்தபோது அந்தத் திருமணக் கொண் டாட்டம் 48 மணி நேரம் நீடித்தது. அந்த நேரம் முழுதும் விருந்தினர்கள் மேல், விதானத்தில் அமைக்கப்பட்ட துளைகளின் வழியே ஒரு கோடியே ஐம்பது லட்சம் டாலர்கள் பெறுமானம் உள்ள முத்துக் களைப் பொழிந்தார்களாம்! -- குமிலி

# கிழிந்த போர்வைக்கு வெளியே...



குடிசையிலிருந்து மாடிக் கட்டிடத்துக்கு மாறியாகி விட்டது. கூடவே தர்ம சங்கடமான சில சந்தர்ப் பங்கள் தோன்றின. சண்டை பூசல்கள் ஆரம்பமாயின. ஒரு கன்னிப் பெண் கேட்கக் கூடாத வார்த்தைகள்; செவி வழி உள்ளே புகுந்து மனசைக் குன்றிப் போகச் செய்யும் வசைச் சொற்கள்!

★

விரல்களை ஒவ்வொன்றாக மடக்கி 'இன்னும் ஏழு நாள்' என்று முனகிக் கொண்டாள் ராஜாத்தி.

இன்னும் ஏழே ஏழு நாட்கள் இந்த நரக வாசத்தை அனுபவித்தால் போதும்.

சந்தடி அடங்கிச் சிறிது நேரமாகி விட்டது. முகத்தை மூடியிருந்த கிழிசல் போர்வையைமெதுவாகவிலக்கிஎன்ன நடக்கிறது என்று பார்த்தாள், ராஜாத்தி.

அவளுடைய தகப்பன் ஒரு மூலையில் துணி விலகினது கூடத் தெரியாமல் மல்லாந்து கிடந்தான். தாய் ஒன்றுமே நடக்காத மாதிரி அடுப்படியில் முகம் கவிழ்ந்து குந்தி உட்கார்ந்திருந்தாள். சற்று நேரம் முன்வரை நடுவீட்டில் இரண்டு மல்லர்கள் மாதிரி மோதிக் கொண்டது இவர்கள் தானு என்று ராஜாத்திக்கு ஆச்சரியமாக இருந்தது. புருஷன் — பெண்டாட்டி என்கிற பிரக்ஞையிழந்து நாயும் காதுசனும் கூகம் படி ஜன்ம விரோதிகளைப் போல் அவர்கள் மோதிக் கொள்வது அன்றாட நிகழ்ச்சியாகி விட்டது. அப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில் ராஜாத்தி ஓசைப்படாமல் வெளியே நழுவி விடுவாள். வெளியில் செல்ல முடியாத அகால வேளையாயின் சுவர்ப் பக்கம் திரும்பிச் சுருண்டு படுத்துப் போர்வையை இழுத்துப் போர்த்திக் கொள்வாள்.

போர்வை இருட்டுக்குள் நெஞ்சு திக்திக் கெனக் கூட்டுப் புழுவைப் போல் அவள் தவிக்கையில் வெளியே அவளுடைய தாயும் தகப்பனும் ஆக்ரோஷம் மிகுந்த மிருகங்களாய்ப் பொருதிக் கொள்வது ரேடியோ நாடகம் மாதிரி கேட்கும்.

ஒரு கன்னிப் பெண் கேட்கக்கூடாத வார்த்தைகள். செவி வழி உள்ளே புகுந்து மனசைக் குன்றிப்போகச்செய்துவிடும்வசைச்சொற்கள்.

வயசுக்கு வந்த மகள் வீட்டில் இருக்கிறாள் என்ற உணர்வின்றித் தன் தாயும் தகப்பனும் அந்த வசைச் சொற்களைச் சரமாரியாகப் பிரயோகித்துக் கொள்ளும் போது போர்வைக்குள் அவளது உடல் மேலும் கூனிக் குறுகிப் போகும்.

இரண்டு வருஷங்களுக்கு முன் பெரிய குட்டையாய்த் தேங்கிக் கிடக்கும் சாக்கடையின் கரையோரம் காளான்களைப் போல் முளைத்த குடிசைகளுள் ஒன்றில் அவர்கள் குடியிருந்தார்கள். அப்போதெல்லாம் கூட இப்படிப்பட்ட தர்ம சங்கடமான சந்தர்ப்பங்கள் நேரிட்டதில்லை.

சாக்கடைக் கும்பியிலிருந்து கொப்புளம் கொப்புளமாக மேலுக்கெழும்பி வெடித்து வீசும் துர்நாற்றம் இருபத்துநான்கு மணி நேரமும் அவர்கள் வசித்த குடிசையின் மீது கவிந்திருந்த போதிலும் குடிசையுள் கழிந்த குடும்ப வாழ்க்கைக்குப் பங்கம் ஏற்படுவது கிடையாது.

திடீரென்று ஒருநாள் கூடைகளும் மண்வெட்டிகளுமாக ஒரு லாரி நிறைய ஆட்கள் வந்து இறங்கினார்கள். அந்தக் குடிசைப் பகுதிக்கு மேற்கே போர் போராய்க் குவிக்கப்



# 'மலர் மன்னன்'

பட்டிருந்த குப்பை செத்தைகளை யெல்லாம் கூடையில் அள்ளி வந்து சாக்கடையில் கொட்டத் தொடங்கினார்கள். அந்த வேலை மளமளவென்று நடந்தேறியது. சின்ன விழிகள் நிறைய வியப்புடன் ராஜாத்தி அதை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த போதே சாக்கடைக் கும்பி தூர்க்கப்பட்டு அதன் மீதும் சுற்றுப்புறங்களிலும் குறுக்கும் நெடுக்குமாகப் பெரிய பெரிய மாமக் கட்டிடங்கள் படிப்படியாய் உயர்ந்து விறைத்து நின்றன. ஒவ்வொன்றும் மூன்றடுக்கு மாடிக் கட்டிடம். ஒவ்வொரு தளத்திலும் பத்துக் குடும்பங்கள் வசிப்பதற்குத் தத்தனி குடித்தனப் பகுதிகள். கட்டிடங்கள் கட்டி முடிந்ததும் குடிசைகள் எல்லாம் அகற்றப்பட்டு அவற்றில் வசித்த குடும்பங்கள் மாடிக் கட்டிடங்களில் குடியேற்றப்பட்டன.

மாடிக் கட்டிடத்தில் அவர்கள் குடியேறிய தினம் ராஜாத்தியின் கண் முன்னால் ஒரு பொன்னுலகம் தோகை பிரித்த மயில் போல் விரிந்தது.

அந்த உல்லாசமான வேளையைக் குலைப்பது போல் பக்கத்து வீட்டு எல்லம்மாக் கிழவி வந்து சேர்ந்தாள். ''அடியம்மா, இன்னைத்தை நாஞ் சொல்லுவேன்... கள்ளுக் கடைங்களை யெல்லாம் தொறந்துவுடப் போறாங்களாண்டி'' என்று அவள் வந்து அங்கலாய்த்ததைக் கேட்டதும் தன் தாயின் முகத்தில் கலவரம் படர்வதை ராஜாத்தி கவனித்தாள்.

வாழ்க்கையில் பெரும் பாதிப்பை ஏற்படுத்தும் அளவுக்கு ஒரு முக்கியமான விஷய

மாக அது இருக்க முடியும் என்று ராஜாத்திக்குத் தோன்றவில்லை. ஏனென்றால் அவள் பிறந்து வளர்ந்த காலம் கள்ளுக் கடை என்றால் என்னவென்றே தெரியாத காலம்.

''கள்ளுக் கடையெத் தொறந்தா இன்னு ஆயா?'' — என்று ராஜாத்தி எல்லம்மாவிடம் குழந்தைத்தனமாகக் கேட்டாள்.

''நீ இன்னுத்தைக் கண்டே'' என்று அங்கலாய்த்து அதன் கொடுமைகளை விளக்கி விட்டுப் போனாள் எல்லம்மா.

எல்லம்மா சொன்னபடிதான் நடந்தது. கள்ளுக்கடைகள் திறக்கும் நாள் நெருங்க நெருங்க ராஜாத்தி போகிற வழிகளில் பெரிய கீற்றுக் கொட்டகைகளும் பந்தல்களும் தென்படலாயின. அங்கெல்லாம் ஆண் பிள்ளைகள் கும்பல் கும்பலாக நின்று கள்ளுக் கடையும் சாராயக்கடையும் வரப்போவதாகக் கண்களில் ஒருவித குரூர வெறி மின்ன, பேசிக் கொண்டார்கள்.

கள்ளுக்கடை திறந்த தினம் ஒரு திருவிழா மாதிரி இருந்தது.

ராஜாத்தி ஆவலை அடக்க மாட்டாமல் கடைத் தெருவில் புதிதாகத் திறந்திருந்த சாராயக் கடைப் பக்கம் போய்ப் பார்த்தாள்.

அங்கே கூட்டம் நெருக்கித் தள்ளியது. கடை வாசலில் சிலர் கும்முட்டியின் மேல் இரும்புப் பலகை வைத்து அதன்மீது கூறு கூறுகக் கொத்துக்கறியைப் பரப்பிச் சுடச்சுட வியாபாரம் செய்து கொண்டிருந்தார்கள்.

சாராயக் கடையின் உட்புறம் ஒரு குதிரை லாயம் மாதிரி இருந்தது. நீளமாய் மேடை கட்டி அதன் மேல் வரிசை வரிசையாகக் குழாய் வைத்த பெரிய கண்ணாடிக் குடுவைகள் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தன. ஒவ்வொரு குடுவைக்குப் பின்னாலும் ஒரு மனிதன் கல்லாப் பெட்டியுடன் சம்மணமிட்டு உட்கார்ந்திருந்தான்.

சாராயக் கடையிலிருந்து வெளியே பிதுங்கி வந்த கும்பலில் தன் தகப்பனும் இருப்பதைக் கண்ட ராஜாத்தி மெல்ல அங்கிருந்து நழுவினாள்.

சாராயக் கடை திறந்த சில நாட்களுக்கெல்லாம் எல்லம்மாக் கிழவியின் அங்கலாய்ப்பும், தன் தாயின் முகத்தில் தோன்றின கலவரங்களும் எவ்வளவு நியாயமானவை என்பது ராஜாத்திக்குப் புரிந்துவிட்டது.

குடிசையில் வசித்த நாட்களில் அவர்களிடம் சின்னதாக ஒரு டிரான்சிஸ்டர் ரேடியோ கூட இருந்தது. ராஜாத்திக்கு அவள் தகப்பன் ஆசை ஆசையாக ஒரு சவரனில் சங்கிலியும் அரைச் சவரனில் கம்மலும் செய்து போட்டது குடிசையில் வாழ்ந்த காலத்தில்தான். மாடிக் கட்டிடத்தில் குடிபுகுந்ததும் அவை சொப்பனம் போல் மறைந்து போயின.

எல்லாவற்றையும் விட, எல்லம்மா சொன்னது போல் தன் தாயும் தகப்பனும் தெரு நாய்களைப் போல் சண்டையிட்டுக் கொண்டதுதான் அவளுக்குச் சகிக்க முடியாத கொடுமையாக இருந்தது.

ஒவ்வொரு நாளும் இரவு வந்ததும் வேளை கெட்ட வேளையில் அங்கே நடக்கிற அந்தக் கொடுமையைக் காணப் பொறுமல் ராஜாத்தி போர்வைக்குள் பதுங்கி வெளியுலகுடன் தனக்கு இருக்கிற சம்பந்தத்தைத் தவிர்த்துக் கொள்வதில் முனைவாள்.

கிழிந்த போர்வைக்குள்ளேயே தனது காலம் முடிந்துவிடும் என்று ராஜாத்தி மனமுடைந்து போன நேரத்தில் திடீரென்று ஒரு நாள் யார் செய்த புண்ணியமோ, திறந்து வைத்த கள்ளுக் கடைகளை மறுபடியும் மூடப் போகிறார்கள் என்ற செய்தி வந்தது. அது முதல் கள்ளுக்கடைகளை மூடும் தேதியை ராஜாத்தி தெரிந்து வைத்துக் கொண்டு போர்வைக்குள் நாட்களை எண்ணத் தொடங்கியிருக்கிறாள்...

இடையிலிருக்கிற நாட்களின் எண்ணிக்கை கைவிரல்களுக்குள் கட்டுப்பட்டு ஒன்றன்பின் ஒன்றாய் மெல்ல உதிர்கின்றன. இன்னும் ஏழே ஏழு நாட்கள். அதன் பிறகு வெளியே நடப்பதைக் காண அவமானப்பட்டு அவள் போர்வைக்குள் பதுங்கிக் கொள்ள வேண்டியிராது. கிழிசல் போர்வையை வீசி எறிந்துவிட்டு நிமிர்ந்து நிற்கும் அவள் முன் நிம்மதியும் நம்பிக்கையும் குதூகலமும் மிகுந்த பொன்னுலகம் மீண்டும் தோகை விரிக்கத் தொடங்கி விடும்.

ஏழு நாட்களும் ஏழு யுகங்களாகக் கழிந்த பிறகு எட்டாம் நாள் பொழுது பிரகாசமாய் விடிந்தது.

அன்று மாலை தகப்பன் நேரத்தோடு வீடு திரும்பினான். அப்போது ராஜாத்தியின் தாய் ஒரு தமிழ் தினசரியைத் தரையில் பரப்பிக் கொண்டு அதில் பத்தி பத்தியாக அச்சாகியிருந்த எண்களை ஒருவித அப்பாவித்தனமான அரைகுறை அறிவோடு துருவித் துருவிப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவள் கரங்களில் பத்துப் பன்னிரண்டு பரிசுச் சீட்டுக்கள் இருந்தன. அவற்றிலிருந்த எண்களில் ஏதேனும் ஒன்றைப் பத்திரிகையில் தன் முன்னால் அலைஅலையாக மிதந்த எண்களினூடே கண்டுபிடிக்க முடியுமா என்று பிரயாசைப் பட்டுப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

''ஏ புள்ளே! என்ன இதெல்லாம்? உன்னை யாரு சீட்டு வாங்கச் சொன்னது?'' என்று அதட்டினான் புருஷன்.

''பின்னே, நீ குடிச்சுத் தொலைச்ச பணத்தையெல்லாம் எப்படி மீட்கிறதாம்?'' என்று இவள் திருப்பிக் கேட்டாள். ''வீட்டிலிருந்த சாமானுங்க ராசாத்தி கழுத்திலிருந்த ஒரு சங்கிலி அல்லாத்தையும் கொண்டு போய் அடகு வைச்சுட்டே.. அதுக்காவத்தான் நாலு கேரளா, ஐந்து அரியானா, ஏழு தமிழ் நாடு வாங்கினேன்.''

''அடி பஜாரி! உன் அதிர்ஷ்டத்துக்குப் பரிசு விளப் போவுதாங் காட்டியும்! சம்பாரிச்ச துட்டையெல்லாம் இப்படிப் பாழாக்கறியே!''

''ஆங்! நீ குடிச்சுப் புரண்டப்ப துட்டுப் பாளாப் போனதாத் தெரியலைங்காட்டியும்! நான் வாங்குவேன்! அடுத்த குலுக்கலுக்கு இன்னும் நாலு சீட்டு கூடவே வாங்குவேன்!''

''அடி கசமாலம்! கய்தே...''

ராஜாத்தி அவசரமாய்த் தரையில் படுத்துக் கிழிந்த போர்வையை இழுத்துப் போர்த்திக் கொண்டாள்.

## நன்றி

எங்கள் அழைப்புக்கு இணங்கித் திறப்பு விழாவுக்கு வருகை தந்த எல்லா வாடிக்கையாளர்களுக்கும் உறவினர்களுக்கும், நண்பர்களுக்கும் எங்கள் அன்பு கலந்த வணக்கத்தையும் நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

1/1, லக்ஷ்மி டாக்கீஸ் ரோடு
ஷெனாய் நகர், சென்னை-30

**கஜலக்ஷ்மி ஸ்டோர்ஸ்**
உரிமையாளர்கள்

---



குற்றாலக் குளிர்மை உங்கள் குளிப்பறையில்!
• பொடுகை நீக்க சித்தர் முறை!

பிரயாண அசதி, தூக்கமின்மை, சிரம் வலி, கூந்தல் உதிர்தல், பரு இவற்றை நீக்கவும் அழகிய கூந்தல் வளரவும் உபயோகியுங்கள்!

ஆதி சித்தர்
**ராஜபிருங்காமலதைலம்**

ஆதி சித்தர் வைத்தியசாலை, ஆபிரகாம் பண்டிதர் ரோடு, தஞ்சாவூர்.

---

# If you are learning or teaching Russian then read...

РУССКИЙ ЯЗЫК ДЛЯ ВСЕХ РУССКИЙ ЯЗЫК ДЛЯ ВСЕХ

# RUSSIAN FOR EVERYBODY

**SUBSCRIPTION RATES**

| | |
|---|---|
| Single Copy | Rs. 1.25 |
| Annual | Rs. 14.00 |
| Three Years | Rs. 25.00 |

PLEASE SEND SUBSCRIPTION DIRECTLY BY M.O., CROSSED POSTAL ORDER OR CROSSED BANK DRAFT MADE IN FAVOUR OF :

**Soviet Land Office,**
25, Barakhamba Road, New Delhi-110001.

- ★ RUSSIAN FOR EVERYBODY provides students of the Russian language with a variety of teaching aids, both for beginners and for advanced-level students.
- ★ RUSSIAN FOR EVERYBODY provides gramophone records to help the students to master the Russian sound system, accent and intonation.
- ★ RUSSIAN FOR EVERYBODY contains special features on "Let's Speak Russian," "Russian Speech Habits," "For You," Quick-witted" etc.
- ★ RUSSIAN FOR EVERYBODY portrays the life of the people of the Soviet Union.
- ★ RUSSIAN FOR EVERYBODY constitutes a standard textbook for teachers of Russian
- ★ SUBSCRIBE 'RUSSIAN FOR EVERYBODY FOR THREE YEARS FOR A COMPLETE COURSE IN RUSSIAN...AT A LESS RATE TOO !



பாலசுப்பிரமணியன் தம்பதி

# மோகம் 30 நாளா?

## கோபமும் குணமும் !

எனக்கும் அலமுவுக்கும் நடந்தது காதல் கல்யாணம். ''தீக்ஷிதர்'' கதையை (ராமாயணம்) கேட்கப் போயிருந்தேன். கூட்டம் ஹால் நிறைந்து இடமில்லாமல் வழிந்தது. ஜன்னல் அருகே இடம் பிடித்து அமர்ந்து ரசித்துக் கேட்டுக் கொண்டிருந்தேன். சிறிதாய் ரசிக்கக்கூடிய சம்பவங்களையும் தீக்ஷிதர் வாயால் கேட்கும்போது ஆர்ப்பாட்டமாய் ரசித்துச் சிரிப்பேன். ஜன்னலோரம் உள்ளே அமர்ந்திருந்த அலமுவுக்கோ ஒரே ஆச்சரியம். சாதுவாய்க் காணும் இவர் மாபெரும் ரஸிகராயிருக்கிறாரே என்று வியப்பு மேலிட்டால் என்னையே ரசித்துக் கொண்டு இருந்தாள். இடையில் ஏதோ என்னுள் உந்த அவளைப் பார்த்தேன். என்னையே அவள் பார்த்துக் கொண்டிருக்கிறாள் என்று உணர்ந்ததும் நானும் கதையை இடையிலேயே விட்டு விட்டு என் வாழ்க்கைக் கதையைத் தொடங்கிவிட்டேன். காதல் மட்டுமே எங்கள் பொறுப்பாயிருந்தது. கல்யாணம் என்னவோ பெரியவர்கள் ஒப்புக் கொண்டு எங்களை ஆசீர்வதித்து, பழனி முருகன்கோயில் சந்நிதியில் 1963ல் 'அவனரு'ளால் நடந்தது.

அலமு நல்ல கறுப்புத்தான். நம்மை விரும்பாத பேரழகியைவிட மனப்பூர்வமாய் நம்மை நேசிக்கும் சாதாரண அழகிதான் வாழ்க்கைக்கு இன்றியமையாதவள் என்று கண்கூடாக உணர்கிறேன்.

முகத்தில் சாந்தம் தவழும் என்னுள், ஓர் எரிமலையே இயங்கிக் கொண்டிருப்பதை என்னை வந்து தஞ்சமடைந்த பிறகே புரிந்து கொண்டாள் அலமு.

எனக்கேற்ற விதத்தில் தன்னைத் திருத்தி அமைத்துக் கொள்ளப் பெரும்பாடு பட்டாள், அந்தப் பேதை. அதில் முழு வெற்றி பெறுவதற்குள் அவள் வாங்கியிருக்கும் அடி, உதை... அப்பப்பா ! எல்லாவற்றையும் பொறுமையாய் ஜீரணித்துக் கொள்வாள்.

பத்து ஆண்டுகளில் என்னுள் கனன்ற எரிமலையும் குளிரத் தொடங்கியது. அலமுவைச் சிவந்த கண்களை விடுத்து நீல விழிகளால் உற்றுப் பார்க்கத் தொடங்கினேன்.

—என். பாலசுப்பிரமணியன், அல்லூர்



## வாழ்க்கைப் படகு !

நான் போலீஸில் ஓர் இன்ஸ்பெக்டராகப் பணியாற்றுபவன். மகா முன்கோபி என்று பெயர் வாங்கியவன். ஆனால் என் கோபத்தை யெல்லாம் பொங்கும் பாலில் தண்ணீர் தெளித்து அடக்குவது போல, இவள் அடக்கி விடும் காரணம் இவள் அமைதிதான். கோபம் வந்து கத்தினால் அமைதியாகச் சிரித்துக் கொண்டே யிருப்பாள். ஒரே ஒரு வார்த்தை எதிர்த்துப் பேச மாட்டாளா என்று இருக்கும். ஆனால் வாயைத் திறக்க மாட்டாள். பிறகு நானே கத்திக் கொண்டிருக்கப் பைத்தியமா, என்ன? ''கப்சிப்'' ஆகி விடுவேன். பிறகுதான் தெரியும் அந்தத் தவற்றுக்குக் காரணம் நான்தான் அவளல்ல என்று. அதை ஒரு மணி சென்று அவளே என்னிடம் வந்து விளக்கும் போது எனக்கு முகத்தில் என்ன வடியும் என்று நீங்களே கற்பனை செய்து கொள்ளுங்கள். எதிலேயும் அவசரம் எனக்கு. அவள் அதற்கு எதிரிடை. ஒவ்வொரு படியாக ஏறினால் விபத்தில்லாமல் மேலே போகலாம் என்று அடிக்கடி கூறி என்னை அமைதிப்படுத்துவாள்.

இவளுடைய பழக்கமெல்லாம் மெதுவாக என்னிடம் ஒட்டிக் கொண்டது. நானும் தெய்வத்தை வழிபடாமல் எந்த வேலையும் தொடங்குவதில்லை. எந்த ஒரு வேலையையும் அவள் ஆலோசனையின்றிச் செய்தால் குட்டிச் சுவர்தான்.

இப்படி என் உள்ளத்திலும், இல்லத்திலும் விசுவரூபம் எடுத்து ஒளிவிடும் அவளுடைய துணையில்லாமல் என்னால் எப்படி என் வாழ்க்கைப் படகை ஓட்ட முடியும்? எனக்கு அவளின்றி வேறு துணையில்லை, பாரதியாரின் பாட்டில் வரும் கண்ணனைப் போல் அவள், என் தோழி, தெய்வம், சேவகி, மந்திரி.

டி. எத்திராசன் பி. ஏ.
திருவள்ளூர் வட்டம்

## ஆல்விருட்சம் !

எங்கள் மண வாழ்க்கை தொடங்கி முப்பத்து மூன்று ஆண்டுகள் முடிந்துவிட்டன. இன்று எனக்கு வயது ஐம்பத்தொன்று. என் மனைவியின் வயது நாற்பத்தாறு. அன்று நான் அவள் அழகிலும் அவள் என் அறிவிலும் மயங்கினோம். ஒருவரையொருவர் விரும்பி மணம் புரிந்து கொண்டோம். எங்கள் காதலுக்குத் தடையாக நிற்காமல் எங்கள் பெற்றோர் எங்களைத் தம்பதியாக்கினர். இன்றும் எங்களிடம் பரஸ்பரக் கவர்ச்சி குன்றவில்லை. ''இரண்டு பெண்களுக்குக் கல்யாணம் ஆகி மாப்பிள்ளைகள் வந்தாயிற்று. பேரக் குழந்தையும் பிறந்தாயிற்று. இன்னும் நீங்கள் இப்படி சிறுசுகள் மாதிரி வெட்கம் இல்லாமல் கூத்தடிக்கிறீர்களே!'' என்று உற்றார் உறவினர், நண்பர்கள் கேலி செய்யும்படி நாங்கள் வாழ்வதில் மகிழ்ச்சியே அடைகிறோம். நாளுக்கு நாள் என் மனைவியின் அழகு மெருகேறி வருவதாகத்தான் எனக்குத் தோன்றுகிறது.

இன்று எங்களுக்குத் தனித்தனியே விருப்பு வெறுப்பு கிடையாது. அவளில் நான் என்னை



ஜெயராமுது தம்பதி

யும் என்னில் அவள் தன்னையும் காண்கிறோம். என்னுடைய விருப்பு, வெறுப்புக்களை அவள் எப்பொழுதோ தன்னுடையவையுமாக ஆக்கிக்கொண்டு விட்டாள்.

கல்யாணம், கார்த்திகை, பண்டிகை என்று வந்தால் மனைவிக்கு என்ன புடவை, நகைகள் வாங்கலாம் என்று நினைக்கிறேனே ஒழிய என்னைப் பற்றியே நினைக்கத் தோன்றுவதில்லை. அவளும் அப்படியே. இதுவரையில் நானாக ஒரு 'சூட்' துணியோ, கைக் கடிகாரமோ மோதிரமோ எனக்காக வாங்கியதில்லை. எல்லாம் அவள் வற்புறுத்தி வாங்கிக் கொடுத்து நான் அணிந்து கொள்பவைதான்.

உடல் உறவு என்ற சிறு வித்திலிருந்து தோன்றியதுதான் எங்கள் அன்பு. இன்று



பெரிய ஆலவிருட்சமாக வளர்ந்து விழுதுகள் விட்டுப் பரந்து நிற்கிறது. வித்து மறைந்துவிட்டாலும் மரம் நிலைத்து நிற்பதுபோல் உடல் உறவின் தேவை மங்கி, மறைந்துவிட்ட பிறகும் எங்கள் நேசமும் பாசமும் எள்ளளவும் மாய்ந்து விடாது என்று எங்களுக்கு நம்பிக்கை இருக்கிறது. ஏதோ ஒரு திரைப்படத்தில் பார்த்தமாதிரி எங்கள் இருவரின் உலக வாழ்க்கை ஒரே கணத்தில் சேர்ந்தாற்போல் முடிய வேண்டும் என்றே நாங்கள் இருவரும் விரும்புகிறோம்.

இதையெல்லாம் அரைப் பக்கத்தில் எழுதச் சொல்கிறீர்களே, அநியாயம்! அரை ஆயிரம் பக்கங்கள் கொண்ட நூல் எழுதினாலும், எங்கள் உள்ளத்து உணர்ச்சிகளை முழுமையாக விவரிக்க முடியாதே!

— **ஆனந்ததீர்த்தன்**, சென்னை—4

## நீடித்த நட்பு

எனக்கும் கோவிந்தம்மாளுக்கும் 27-8-1939 ஞாயிற்றுக்கிழமை ஸ்ரீவில்லிப்புத்தூர் மாரியம்மன் கோவிலில் திருமணம் உறவினர்களின் பலத்த எதிர்ப்புக்கிடையில் போலீஸ் பாதுகாப்புடன் மிக எளிய முறையில் நிறைவேறியது.

ஆதியில் எங்கள் திருமணத்தைச் செல்லத் தக்கதில்லை என நீதிமன்றத்தில் வழக்குத் தொடர்ந்த என் தகப்பனாரே "எனது ஐந்து மருமகளிலும் இவளே நல்லவள்" என்று உளமாரப் புகழ்ந்த



எதிராஜன் தம்பதி

தோடு அவர் உயிரோடு இருந்த நாள் வரை எங்களுடனேயே இருந்தார்.

நெருங்கிப் பழகிய யாவருக்கும் என் மனைவி தக்க உதவியைத் தயங்காது செய்வாள். பச்சிளங் குழந்தைகளுக்கு ஏற்படும் சகல வியாதிகளுக்கும் கைப்பக்குவமாகவே நாட்டு மருந்துகளால் வைத்தியம் செய்வதிலும் வல்லவள். ஒருபோதும் பிரதிபலன் கருத மாட்டாள். தெய்வ பக்தியும் ஆசாரமும் நிறைந்தவள். விருந்தோம்பலிலும் கைதேர்ந்தவள்.

திருமணமாகி முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு மேலாகிறது. சென்ற 10-12-74 தேதியில் தான் எங்களுடைய சஷ்டியப்த பூர்த்தி விழாவை எங்களுடைய மருமகன்மாரும் மக்களும் சிறப்பாக நடத்தினார்கள். முப்பத்தைந்து ஆண்டுகளாகியும் எங்களிருவரிடையில், ஆதியில் நிலவிய அன்பும் பரிவும் இன்றுவரையில் நீடித்து வருகிறது.

ஸ்ரீ. ஜெயராமுது
மதுரை

## பண்பின் பெட்டகம்

கடந்த பன்னிரண்டு ஆண்டுகளில் பொது வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கிற காரணத்தால் எத்தனையோ தொல்லைகளைக் குடும்பத்துக்குத் தந்திருக்கிறேன். மாதத்தில் பத்து நாட்கள் வெளியூர் சுற்றுப் பயணம். ஊரில் இருந்தாலும் அதிகாலையில் வீட்டை விட்டுக் கிளம்புதல், இரவு நேரம் கழித்து திரும்புதல், வீட்டில் இருக்கும் நேரத்தில் பிள்ளைகளுக்குப் படிப்பு சொல்லிக் கொடுப்பதையும் வீட்டு வேலைகளைக் கவனிப்பதையும்விடத் தொழிற்சங்கப்பணிகளில் ஈடுபடுதல்—அதற்காகத் தயாராகிக் கொள்ளுதல் ஆகிய காரியங்களிலேயே ஈடுபடுதல் — இவ்வளவையும் தாங்கிக் கொள்கிற ஒரு மனைவியைவிட அன்பானவர் யார் இருக்க முடியும்? அத்தகைய ஒரு சிறப்பு எனக்குக் கிடைத்திருக்கிறது.

அழகாக அலங்காரங்கள் செய்துகொண்டு வெளியே வரக்கூடிய பழக்கம் — இலக்கியங்களைப் பற்றி விவாதிக்க படிப்பு—அலுவலக வேலை செய்வதினால் வரக்கூடிய நாகரிகம் இல்லாமல் இருக்கலாம் என் மனைவிக்கு. ஆனால் அன்பையும் பண்பையும் சிறந்த அழகாகக் கருதி மன நிறைவு அடைகிறேன் நான்.

டால்ஸ்டாய்க்கு உள்ள எழுத்து வன்மையும், சாக்ரடீஸுக்கு உள்ள வாதத் திறமையும் எனக்குக் கிடைக்காமல் இருக்கலாம். ஆனால் அவர்களுக்குக் கிடைத்தது போன்ற அன்பற்ற துணைவியரிடமிருந்து மாறுபட்ட மனைவியைப் பெற்றிருப்பதால் பெருமைப்படுகிறேன்.

—**சிவ. இளங்கோ**, சென்னை — 5

## பழமொழியின் பொருள்!

திருநெல்வேலி ஆசிரியர் பயிற்சிப் பள்ளியில் நான் பணியாற்றிக் கொண்டிருந்த போது ஏற்பட்ட 'முதல் சந்திப்பு' நாளடைவில் தூய காதலாகத் தொடர்ந்து, எதிர்ப்புக்கள் போராட்டங்கள் இவற்றுக்கிடையில்—நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து பெற்றோர்கள் சம்மதத்தின் பேரில், 1960ம் ஆண்டு மே மாதம் சித்திரா பௌர்ணமியன்று பாளையங்கோட்டை பெண் வீட்டில் வைத்துத் திருமணமாக நடைபெற்றது.

மோகம் முப்பது நாள்! ஆசை அறுபது நாள்! ஆகமொத்தம் தொண்ணூறு நாளில் ஆண் பெண் உறவும் அன்பும் காதலும் குறையும் என்ற கருத்தில் முன்னோர்கள் இந்தப் பழமொழியைக் கூறியதில்லை — என்பதே எங்கள் எண்ணம்.

மோகம் மூப்பதினால் — அதாவது வயது ஆக ஆக மூப்பு அடைவதினால் நீங்கும் என்பதும் ஆசை அறுப்பதினால் — மனத்தைவிட்டு ஆசைகளை அறுப்பதினால் — நீங்கும் என்பதும் தான் இந்தப் பழமொழியின் கருத்தாக இருக்க முடியும் — என்பதே எங்கள் கருத்து.

ஆனால் எங்களைப் பொறுத்த அளவில் சித்ரா பௌர்ணமி முழு நிலவு நாளன்று தொடங்கிய எங்கள் தாம்பத்திய வாழ்வு இன்னும் முழு நிலவாகவே பரிணமித்துக் கொண்டிருக்கிறது!

—நெல்லை ஆ. கணபதி, சென்னை–15

## வேற்றுமை குறையல்ல!

"மகாத்மா காந்திக்கு ஜே" போட்டுப் பள்ளிப் படிப்பை நிறுத்திவிட்டுப் பதினைந்தாவது வயதிலேயே நாடு கடந்து இலங்கை சென்றேன். பின், பன்னிரண்டாண்டுகள் கழிந்து இங்கு என் பெற்றோர் எனது கல்யாணத்துக்கு ஏற்பாடு செய்த போது, பெண்ணை நான் முன்னதாகப் பார்த்திருக்கவில்லை. சற்று முதுகுக் கூனல் தோற்றமும் தலையில் ஓரிரு இள நரையையும் பார்த்த போது எனக்கு ஏமாற்றம் உண்டாயிற்று. ஆனால் என் மனைவியின் குடும்பப் பாங்கு ஒரு நல்ல இல்வாழ்க்கையை அமைத்துத் தந்த போது ஏமாற்றம் மறைந்து அன்பும் அன்னியோன்யமும் உண்டாயிற்று. இன்னும் இரண்டாண்டுகளில் எங்கள் இல்வாழ்வின் வெள்ளி விழா வருகிறது. இந்த இருபத்து மூன்று ஆண்டு இல்வாழ்க்கை இனிமையும் அமைதியும் நிறைந்திருந்தது. எனக்கு அளவுடன் இரண்டு குழந்தைகளைப் பெற்றுக் கொள்ள வேண்டுமென்று ஆசை. ஆனால் மூன்றாவது குழந்தையும் பிறந்தபோது, குடும்பக் கட்டுப்பாடு சிகிச்சை செய்து கொள்ள விரும்பினேன். ஆனால் என் மனைவி அதை ஆதரிக்கவில்லை. உங்கள் மகாத்மாவின் அறிவுரையான மனக் கட்டுப்பாட்டைக் கடைப்பிடியுங்கள் என்று சொல்லி விட்டாள். நானும் அதையே சவாலாக ஏற்றுக் குடும்பம் மேலும் அதிகரிக்காமல் பார்த்துக் கொண்டேன்.

மகாத்மா இலங்கை சென்ற போது, அன்னை கஸ்தூரிபாயைச் சுட்டிக் காட்டி, "உங்கள் அன்னையை அழைத்து வந்திருக்கிறீர்களே, மனைவி வரவில்லையா?" என்று ஒருவர் கேட்டாராம். அதே போல் நாங்கள் இலங்கையில் வசிக்கையில், புதிதாக அறிமுகமான ஒரு பெண்மணி, என் மனைவியைக் காட்டி, 'இவர் உங்கள் அன்னையா, மனைவி எங்கே?' என்று கேட்டார். ஆனாலும் இந்த உருவ வேற்றுமை எங்கள் வாழ்க்கையில் ஒரு குறையாக இருக்கவில்லை.

ராதாபுரம் பெ. சொக்கலிங்கம், கோச்சி

## சோதனையும் சாதனையும்

சுமார் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன்னால் நான் சென்னையில் தனியார் நிறுவனமொன்றில் குமாஸ்தாவாகப் பணியாற்றிக் கொண்டிருந்த வேளை, என் மனைவி, "இசைக் குயில்" பி. ஏ. இரண்டாவது ஆண்டு படித்துக் கொண்டிருந்தாள். அந்நேரம் என் வாழ்வில் ஏற்பட்ட ஒரு பெருந் தோல்வி காரணமாக நான் மதுவுக்கு அடிமையாயிருந்ததால், காதலியாக அல்லாது சமூக சேவகி என்னும் பாணியிலே அவள் என் வாழ்க்கையில் குறுக்கிட்டாள். சென்னையைச் சேர்ந்த இந்து சைவப்பிள்ளைமார் குலத்தவள். நான் நெல்லை மாவட்டத்தைச் சேர்ந்த கிறிஸ்துவக் குடும்பத்தவன். அவர்கள் ஆகமம்படி அடியேன் சூத்திரன். எஸ்.எஸ்.எல்.சி. முடித்ததும் பிழைப்புக்காகச் சென்னை வந்தவன். ஒருநாள் அவள் கல்லூரிக்கு வரும்போது அவள் தலையில் சூடியிருந்த ரோஜாவைப் பார்த்துப் பின் பக்கமாகச் சைக்கிளில் வந்த நான் 'பூவிலே சிறந்த பூ என்ன பூ' என்று கேலியாகப் பாடினேன். உடனே 'செருப்பு' என்று தன் காலைக் காட்டிச் சென்



◄நெல்லை ஆ. கணபதி தம்பதி

இசைக்குயில் ஜே. செ, பி. ஏ. ▼





▲ சொக்கலிங்கம் தம்பதி



ராமமூர்த்தி தம்பதி

ருள். எங்கு இந்த அடங்காப் பிடாரி நமக்குக் கிடைக்கப் போகிருள் என்று எண்ணி னேன். அன்று முதல் அவள் நினைவை மறக்கத் தினமும் குடித்தேன். தேவதாஸ் நிலையில் தினமும் என்னைக் கண்ணுற்ற அவள் நமக் காகத்தானே இவர் இப்படி அலேகிருர் என மனமிரங்கி என்னைத் திருத்தப் பாடுபட்டாள். மதுவின் பிடியிலிருந்தும், மாற்று மங்கையரின் பிடியிலிருந்தும் என்னை மீட்கப் போராடிய அவள் ஒரே ஆண்டில் தன் பெற்ருேர் சம்மதமின்றியே என் வாழ்க்கைத் துணைவி யாகி விட்டாள்.

இந்துக் குடும்பத்தவளானுலும் என்னுடன் கிறிஸ்தவ மதத்துக்கு மாறிக் கொண்டாள். ஒரு செயினுக்கு மேல் அணிய ஆசைப்பட மாட்டாள். அவள் ஒரு பி. ஏ. பட்டதாரி யாக இருந்தும், எஸ்.எஸ்.எல்.சி. படித்த என்னிடம் தன் அறிவுத் திறனையோ, படிப்பையோ உயர்த்திக் கொள்ளவே மாட் டாள். நடிக்கிருளோ எனப் பல முறை நான் அவளைப் பரிசோதித்ததுண்டு. தோல்விதான் எனக்குக் கிட்டும். அவளோடு இன்னும் முப்பதாயிரம் நாட்கள்கூட மோகத்துடன் வாழ இயலும்.

— டி. எமர்ஸன் ஜே. சிங்

## வளர்ந்த நேசம்!

நான் இன்று ஓய்வு பெற்ற ரயில்வே ஊழியன். என் மனைவியை இருபது வருஷங்களுக்கு முன், அடக்கம் பண்பு நிறைந்த குணவதி. அத்துடன் கட்டு ஜும் களையான முகமும் படைத்த குமரி என்று விரும்பிக் கல்யாணம் செய்து கொண்டேன்.

இடனறிந்து, ஊடி, உட்கி, என்ற நாலடியார் பாடல் நினைவு வரும் — இவள் மென்மையாகப் பழகும் பொழுது.

தெய்வ பக்தி நிறைந்தவள் - பெரியோர்கள் வழி வந்த நல்ல பழக்க வழக்கமுள்ளவள். குடும் பத்தில் ஏற்றத் தாழ்வுகளில் சலிப்படையாமல் ஒத்த உள்ளத்துடன் கைகொடுக்கிருள். எப்பொழுதும் அலங்காரமாகத் தோன்றுவாள். எனது இந்த வய திலும் இன்பமெல்லாம் முகத்தில் ஓட என்னிடம் ரசனையுடன் பேசுவாள். இத்தனைக்கும் மேலாக என் குறிப்பும் தேவையுமறிந்து உணவு படைப்பாள்.

இந்த மனைவியிடம் வளர்ந்த நேசம் உறுதியான தில் ஆச்சரியம் என்ன!

கே. ராமமூர்த்தி, கும்பகோணம்



பாலகிருஷ்ணன் தம்பதி

## பொறுமையின் பூஷணம்!

அழகான பெண்களுடன் நான் அக்கப் போர் பேசுவதைக் கண்டு முகம் சுளிக்கமாட் டாள் என் மனைவி விஜயா. என் 'ரசனை'க்குக் கவி பாடுவாளே தவிர, எந்தவிதமான, 'ஒழுங்கு நடவடிக்கை'யும் எடுக்கமாட்டாள்.

எனக்குக் கொஞ்சம் 'ஜிஹ்வா சபலம்' அதிகம். சாப்பாட்டு விஷயத்தில் நாக்கு நீளம், மூக்கு நீளம் எல்லாம் உண்டு. விஜயா வின் 'நளபாகம்'தான் அவளுடைய இன் ஞெரு கவர்ச்சி.

கொஞ்சம் கோமாளித்தனமாக ஆடை அணிந்து கொண்டு சென்ருல்தான் எந்தக் கல்லூரியிலும் 'பெரிய பேராசிரியர்', 'பேதை' என்ற பெயர் நிலைக்கும். இதற்கும் என் மனைவி விஜயா உதவி செய்கிருள். என் னுடைய சட்டைகளைத் தானே தைப்பேன் என்று பிடிவாதம் பிடிப்பதுடன், என்னை அணிந்து கொள்ளும்படியாகவும் கட்டாயப் படுத்துகிருள்!

எழுத்து உலகிலிருந்து கிடையாதபடி என்னைப் பார்த்துக் கொள்வதும் அவள்தான். இதற்குத் தமிழ் நாடே அவளுக்குக் கடமைப் பட்டிருக்கிறது!

பத்திரிகைகளில் வரும் தொடர்கதைகளை எல்லாம் படிக்கப் பொறுமை இல்லாத எனக்கு, அவற்றைப் படித்துக் கதைச் சுருக் கத்தை அவள் சொல்லும் அழகே தனி. வயலட் கலர் விஷயத்திலும் இருவருக்கும் ஒற்றுமை உண்டு. இத்தனைக்கும் ஜாதகப் பொருத்தம் பார்க்காமல் மணந்து கொண்ட வர்கள் நாங்கள்!

எல்லாவற்றுக்கும் மேலாக என் குறட்டை யுடன் வாழக் கற்றுக் கொண்டிருக்கும் அவள் பொறுமையை எங்ஙனம் வர்ணிப்பேன்?

— ஜி. எஸ். பாலகிருஷ்ணன்

['கல்கி'யில் வெளிவந்த எங்கள் கதைத் தலைப்புக்கள் இக்கட்டுரையில் ஒளிந்துகொண் டிருக்கின்றன.]

# கல்யாண மேஜை

ஆர்வி



**உத்தியோகத்தில் அமரும் பெண்ணுக்கு அன்றடம் புதுப் புதுப் பிரச்னைகள். அவற்றில் தைரியமாகவும் துரிதமாகவும் முடிவெடுக்க வேண்டியவை சில. ஆபத்தில் கொண்டு விடுமோ என்று அஞ்சும்போது ஆச்சரியத்தில் ஆழ்த்தும். 'போனஸ்' கிடைத்தால்...!**

ஒன்பது பத்துக்குப் பஸ் அங்கே வரும் என்று பெயர்தான். அதற்கு மேல் கால் மணி ஆகியும் பஸ்ஸையே காணும். இன்னும் ஐந்து நிமிஷங்களில் அவள் பாங்கியில் இருந்தாக வேண்டும். அந்தப் பக்கம் டாக்ஸி, ஆட்டோ என்று ஒன்றும் கிடைக்காது. அப்படியே கிடைத்தாலும் குறிப்பிட்ட நேரத்துக்குள் போக்குவரத்துச் சிக்கல்களைத் தாண்டிக் கொண்டு போய்ச் சேருவது நிச்சயமில்லை. அக்கம் பக்கத்தில் எங்கிருந்தாவது போன் செய்யலாம் என்பதற்கும் வழியில்லை. இருந்தாலும் அதைச் சாதித்து முடிப்பதற்குள் நேரவே போய்ச் சேர்ந்து விடலாம். என்ன செய்வது என்று புரியாமல் மாலதி தவித்துக் கொண்டிருந்தாள்.

அலுவலகங்களுக்கும் கல்லூரி கான்வென்டுகளுக்கும் போகிற வண்டிகள் விடாமல் சென்றன. மற்ற எல்லோரையும் போல மாலதியும் அவற்றை அக்கறையின்றிப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவளுக்குத் தன் மீதே எரிச்சலோடு கோபமும் உண்டாயிற்று. இருந்தால் இப்படியெல்லாம் சௌகரியமாக இருக்க வேண்டும்; இல்லாவிட்டால் இது என்ன திண்டாட்டப் பிழைப்பு என்று ஒரு சலிப்பு.

அவள் தன் கையிலேயே வைத்திருந்த சாவியைப் பார்த்துக் கொண்டாள். பாங்கியில் அவள் வேலை பார்க்கும் பிரிவிலுள்ள ஷெல்ஃபின் சாவி. முக்கியமான தபால்களும் ரிக்கார்டுகளும் அதனுள் தான் இருந்தன. கிளை நிர்வாகியிடம் மறு சாவி இருந்தாலும் அவள் போய்த்தான் திறக்க வேண்டும். பத்து மணிக்கு பாங்கி இயங்கத் தொடங்குகிறது என்றாலும் பெரும்பாலும் எல்லோரும் ஒன்பதரைக்கே வந்து தங்கள் இடத்தில் உட்காரத் தொடங்கி விடுவார்கள். அதிலும் மாலதி ஒன்பதரைக்கு இருந்தே ஆக வேண்டும். ஐந்து அல்லது பத்து நிமிஷங்கள் தாமதமானால் தலை போய்விடாது என்றாலும் அது பேச்சுக்கு இடம் கொடுக்கும் என்பதுதான் அவள் கவலை. முன்னால் செய்து வைத்துக் கொள்ள வேண்டிய பல வேலைகள் தடங்கல் பட்டுப் போகும். அதனால் புதுப் பிரச்னைகள் எழும். 'பிறகு அவசியமில்லாத கேள்விகள் வரும். அதெல்லாம் அவளுக்குப் பிடிக்காத சங்கதிகள். இதுவரையில் அப்படி நடந்ததில்லை. லெட்ஜர் என். எஸ். மணி அந்த

மாதிரி அசந்தர்ப்பம் ஏதாவது நேராதா என்று வெகு ஆவலாக இருக்கிறான் என்று அவளுக்குத் தெரியும். அவளுக்கு முன்பு அந்த இடத்தில் இருந்த வசந்தி அவனைப்பற்றி எச்சரித்திருக்கிறாள். அவன் என்னவோ நல்லவன்தான். ஆனால் பெண்களைக் கண்டால் அவனுக்குப் பிடிப்பதில்லை. ஒரு பெண் தனக்கு வேலை சொல்வதாவது, அவளுக்குப் பதில் சொல்லிக் கொண்டிருப்பதாவது என்று அவனுக்கு ஓர் அலட்சியம். இடக்காக ஏதாவது சொல்வான்; அல்லது செய்து விடுவான். வஸந்தி அவன் வம்புக்கே போகவில்லை. ஆனால் மாலதி வேலை தெரிந்தவள். அத்துடன் பெண்களை அலட்சியமாய், இளப்பமாய் நினைப்பவர்களுடைய அபிப்பிராயத்தை மாற்றிக் காட்ட வேண்டும் என்று முனைபவள்.



இப்படி எத்தனை நாளைக்கு பஸ்ஸுக்குத் திண்டாடிக் கொண்டே காலம் தள்ளுவது! ஒன்று அவள் இந்த வேலையைக் கிட்டத்தில் இருக்கும்படியாக மாற்றிக் கொள்ள வேண்டும்; இல்லையோ வேலையையே விட வேண்டும். அல்லது பாங்குக்குச் சமீபமாகக் குடியிருக்கிற இடத்தை மாற்றிக் கொள்ள வேண்டும். இரண்டுமே நடக்கிற காரியங்கள் இல்லை. இன்றொன்று நடந்தால் பிரச்னை தீரலாம். ஆனால் முதலில் அதுவே ஒரு பெரிய பிரச்னையாச்சே! அப்புறமல்லவா அது நடக்கிற பிரச்னை வர வேண்டும்? கிட்டத்தட்ட எண்ணூறு ரூபாய் வேலையை விடுவதாவது? அதற்குப் பைத்தியமா பிடித்திருக்கிறது? இல்லை; நூற்றைம்பது ரூபாய்க்கு நாலைந்து பேர் இருக்கும்படியாகத் தனி வீடு இது போல் சென்னையில் கிடைக்குமா? இன்றைக்குக் காலி செய்தாலும் முந்நூறு, நானூறு கொடுக்கக் காத்திருக்கிறார்களே. மாலதிக்குத் தெரிந்து அவளுடைய கல்லூரிச் சிநேகிதி சாவித்திரியே அவ்வளவு கொடுத்து வரத் தயாராய் இருந்தாள். கல்யாணமாகியிருந்து தனியாகக் குடித்தனம் போட இடம் கிடைக்காமல் இரண்டு வருஷங்களாகத் தவிக்கிறாள். இருக்கிற வீட்டை விட்டு வேறு இடம் பார்ப்பதாவது?

மாலதிக்குக் கல்யாணமாக வேண்டியதுதான். ஆனால் எதுவும் நினைத்தால் நடந்துவிடுகிறதா? நினைக்கவே வேண்டாம் என்று இருந்து விட்டால் நடக்காமல் போய் விடுகிறதா? இரண்டும் இல்லை. ஆனால் வயசை நினைத்துப் பார்த்தால் கல்யாணத்தைப் பற்றி நினைக்க வேண்டியிருந்தது. குடும்பத்தின் நிலையைக் கொஞ்சம் எண்ணிப் பார்த்தால் நினைக்காமலே இருக்க வேண்டியிருந்தது. அப்பாவுக்கு வயசாகி விட்டது. தங்கை கல்லூரியில் படிக்கிறாள். கடைக்குட்டித் தம்பியும் படிக்கிறான். குடும்பம் மாலதியினால்தான் நடக்கிறது. அவளுக்குக் கல்யாணமும் ஆக வேண்டும்; குடும்பமும் நடக்க வேண்டும். இந்தக் கவலையிலேயே அம்மா உருகிப் போகிறாள். அடுப்பில் உலையை வைத்து விட்டு மாலதியைப் பற்றி நினைத்துக் கொண்டால் போதும், சமையலே ஆகாது. இன்றைக்கு அதனாலேயே நேரமாகி விட்டது.

மாலதி கைக்கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டாள். மணி ஒன்பது முப்பது ஆகி விட்டது. அதே சமயத்தில் எதிரே கார்கள் சாரி சாரியாகப் போகத் தொடங்கின. அவள் துணிந்து பிளாட்பாரத்தை விட்டிறங்கினாள். முதலில் வந்த காரில் முன்புறம் ஒரு டிரைவரும் பின்னால் ஒரு பெரிய மனிதரும் இருந்தார்கள். அந்த வண்டியை நிறுத்த அவள் மனம் துணியவில்லை. இரண்டாவது வண்டியில் ஓர் இளவட்டக் காளை. ஹிப்பித் தலை காடாக வளர்ந்திருந்தது. கன்னம், உதடெல்லாம் ஒரே புதர். அதையும் விட்டு விட்டாள். சேர்ந்தாற்போல் வந்த நாலைந்து வண்டிகளிலும் கிட்டத்தட்ட கட்டச் சட்டை காட்டுத் தலையர்கள்தான். கல்லூரிக்குப் போகும் பெருங்குடிச் செல்வங்கள் என்று பட்டது. இப்படியே விட்டுக் கொண்டிருந்தால் நேரமாகி விடும் என்று முன்னால் வந்தாள். யாராயிருந்தாலும் இருக்கட்டும் என்று குறுக்கே வந்து கையைக் காட்டினாள். அந்த வண்டி இவளைப் பார்த்து விட்டுத் தயங்கி நின்றது. பார்த்தால் வடக்கத்திக்காரர் போல் இருந்தது. வாலிபம்தான். அவளை ஒரு தடவை நன்றாகப் பார்த்தார். எதுவும் பேசாமல் பின் கதவைத் திறந்து விட்டு, ஏறிக் கொள்ளும்படி சைகை காட்டினார். மாலதி அவருக்கு ஆங்கிலத்திலேயே நன்றி கூறிவிட்டு, போக வேண்டிய பாங்கியையும், நேரமாகி விட்டதால் ஏறிக் கொள்ள நேர்ந்ததையும் குறிப்பிட்டு மன்னிக்க வேண்டினாள்.

அவர் எதற்கும் ஒன்றுமே சொல்லவில்லை. தலையை அசைப்பது மட்டும் தெரிந்தது. முன்புறமிருக்க வியூஃபைண்டரில் அவருடைய — களையான முகமும் குளிர்ச்சிக் கண்ணாடியும் தெரிந்தன. தும்பைப் பூ வெள்ளைச் சட்டையில் சிவப்பு டை.. ஷாம்பூ தேய்த்துக் குளித்த தலை. காது, கழுத்துப் பட்டையெல்லாம் நல்ல நிறம். வண்டி மவுண்ட் ரோட்டுக்குப் போய் வலதுபுறம் திரும்பிற்று.

"எஸ்பிளனேட்டிலேதானே பாங்க்?"

அவர் தமிழ் பேசியதைக் கேட்டதும் அவளுக்கு வெட்கமாகப் போய் விட்டது.

"ஆமாம்!"

அதற்கு மேல் பேச்சில்லை. வண்டியின் வேகம் மட்டும் அதிகரித்தது. மாலதி கதவுப் பக்கமாக உட்கார்ந்து, தன் துணிச்சலான செய்கைக்கு ஏதாவது சமாதானமாகப் பேச வேண்டும் என்று மட்டும் ஆசைப்பட்டாள். ஆனால் என்ன பேசுவது, எப்படித் தொடங்குவது என்று புரியவில்லை. நடு நடுவில் சமயத்தை எதிர்பார்த்துக் கண்ணாடியில் தெரிந்த அவருடைய முகத்தைப் பார்க்க முயன்றாள். கண்ணியம் பொருந்திய முகம். பாதையின் மீதே பதிந்திருந்த பார்வை, ஒரு முறை அவளுடைய பார்வையைச் சந்தித்துச் சிறிது தயங்கியதைக் கண்ட போது அவள் கூச்சமுற்றாள். வண்டி மேம்பாலத்தில் ஏறிச் சென்றது.

"பாங்கியிலே என்ன?"

"அதில்தான் எனக்கு வேலை."

"ஓ. அப்படியா? அதுதானே பார்த்தேன். சரி, நீ... நீங்கள் என்ன பி.ஏ.யா, எம்.ஏ.யா?"

"எம். எஸ்ஸி."

அவர் முகத்தில் சிரிப்புத் தவழ்ந்தது. அவருடைய ஆங்கிலமும் அருமையாக இருந்தது.

"காமர்ஸ், எகனாமிக்ஸ் மாதிரி இருந்தால் பாங்கிக்குப் பயன்படும். சயன்ஸ் சப்ஜெக்டுக்கும் பாங்கித் தொழிலுக்கும் என்ன சம்பந்தம்?"

"யாருக்குத் தெரியும்? என் வரையில் சம்பளம் வாங்குகிற சம்பந்தம் ஒன்றுதான். வேறு வேலைக்குப் போயிருந்தா இந்தச் சம்பளம் கிடைக்காது. என் படிப்புக்கும் பாங்கித் தொழிலுக்கும் சம்பந்தம் உண்டா என்று நான் எதற்குக் கவலைப்படணும்? அவர்கள் அல்லவா பார்க்க வேண்டும்?"

"அதை யார் பார்க்கிறார்கள்? லேடீஸ் என்றால் உருவத்தைப் பார்க்கிறார்கள். லட்சணத்தைப் பார்க்கிறார்கள். சிபாரிசைப் பார்க்கிறார்கள். மற்றதையெல்லாம் எங்கே கவனிக்கிறார்கள்? அது சரி; உங்கள் வீட்டுக்காரர்?"

அதற்குப் பின்னாலிருந்து பதில் வரவில்லை.

"தெரியாமல் கேட்டு விட்டேன். மன்னிக்க வேண்டும்."

"பரவாயில்லை; கேட்டதிலே என்ன தப்பு?"

கடைசியாக வண்டி பாங்கி வாசலில் நின்றபோது மணி ஒன்பதே முக்கால். மாலதி அவசரம் அவசரமாக வண்டியை விட்டிறங்கிக் கொண்டு அவர் பக்கம் வந்தாள்.

"ரொம்ப நன்றி. இந்த உதவியை நான் என்றைக்குமே மறக்க மாட்டேன்!"

"நானும்தான். எனக்கு இது மகிழ்ச்சிகரமான அனுபவம்."

மாலதி படியேறும்போது எதிரே பார்த்தாள். அங்கே லெட்ஜர் மணி வெற்றிலையில் சுண்ணாம்பைத் தடவியவாறே அவளைப் பார்த்துக் கொண்டு நின்றிருந்தான். அவளுக்கு இருந்த உற்சாகமெல்லாம் மறைந்தோடி விட்டது. இவன் கண்ணில் பட்டோமே என்ற வேதனையோடு அவனைக் கடந்து சென்றாள்.

அன்று மத்தியானம் இடைவேளைக்குப் பிறகு அவளுடைய மேஜையின் மேல், "கங்கிராஜுலேஷன்ஸ்!" என்று ஒரு துண்டுச் சீட்டில் எழுதி வைக்கப்பட்டிருந்தது. அதைப் பார்த்ததுமே அவளுக்குக் கோபம் மூண்டெழுந்தது. முகமெல்லாம் இன்னும் அழகாகச் சிவந்து கொடுத்தது.

லெட்ஜர் மணியைத்தான் அவள் உடனே பார்த்தாள். அவன் பக்கத்திலிருப்பவனிடம் மாலதியைக் கவனிக்கும்படி கையைக் காட்டிச் சைகை செய்து கொண்டிருந்தான். மாலதி தன்னைக் கவனிக்கிறாளே என்று அவன் சிறிதும் லட்சியம் செய்யவில்லை.

அவள் அந்தத் துண்டுக் கடிதத்தைக் கையில் எடுத்துக் கொண்டு விசுக்கென்று எழுந்தாள். 'இது என்ன முட்டாள்தனம்?' என்று அவனையே கேட்டு விட நினைத்துப் பாதித் தூரம் வந்தவள், திரும்பி உதவி நிர்வாகியின் அறையை நோக்கிப் போனாள்.

சுமார் கால் மணி நேரம் கழித்து லெட்ஜர் மணிக்கு உள்ளிருந்து அழைப்பு வந்தது.

பல் வைத்தியர்கள் கூறுகிறார்கள்:

# தவறாமல் பிரஷ் கொண்டு பல் துலக்கி, ஈறுகளைத் தேய்த்துக் கொடுத்தால், ஈறு உபாதைகளையும் பற்சிதைவையும் தடுக்கலாம்.

## போர்ஹென்ஸ் பற்பசையைத் தவறாமல் உபயோகிப்பவர்கள் தாங்களாகவே கூறுகிறார்கள்:

''இப்பொழுது எனக்கு வயது இருபது. நான் பனிரெண்டு வயது முதலே போர்ஹென்ஸ் உபயோகித்து வருகிறேன். முதன் முதலாக போர்ஹென்ஸ் உபயோகிக்கத் தொடங்கியபோது, என் ஈறுகளுக்கு சிறிது தொல்லை ஏற்பட்டது. ஆனால் இப்போது அது சரியாகிவிட்டது: தொல்லை ஏதும் இல்லை... முதலில் நான் இரவில் பற்களைத் துலக்குவதில்லை. இரவில் 10 மணிவரை படிப்பது வழக்கம். அப்போது தினமும் உங்கள் விளம்பரம் 'ஒரு புதிய பழக்கத்தை நினைவுறுத்தும்''

(கையொப்பம்)
எஸ். மித்தல், பி.ஏ. (எலெக்ட்ரிகல்),
பாட்டியாலா.

''நான் புகை பிடிப்பவன் அல்ல. எனினும், ஓர் ஆண்டுக்கு முன்பு, என் பற்கள் மஞ்சளாக இருப்பதைக் கவனித்தேன். முப்பது ஆண்டுகளாக போர்ஹென்ஸ் உபயோகித்து வரும் என் தந்தை, நான் உபயோகித்து வந்த பற்பசையை விட்டு விட்டு, போர்ஹென்ஸுக்கு மாற்றிக் கொள்ளச் சொன்னார். அப்படியே செய்தேன்; என்ன ஆச்சரியம்! இப்பொழுது என் பற்கள் வெண்மையாகப் பளிச்சிடுகின்றன. அதற்குக் காரணம் உங்கள் போர்ஹென்ஸ் பற்பசைதான். நீங்கள் கூறும் சிறப்புகள் அனைத்தும் அதில் உள்ளன. **ஒரு பல் வைத்தியரால் உருவாக்கப்பட்ட பற்பசை** அது என்பது மட்டுமே போதும் அதன் சிறப்புக்கு!

(கையொப்பம்) எஸ்.எஸ். சட்டர்ஜி,
கோயம்புத்தூர்.




(மேற்கண்ட சான்றிதழ்களின் புகைப்பட நகலை ஜெப்ரி மேனர்ஸ் & கம்பெனி லிமிடெட்டின் எந்த அலுவலகத்திலும் காணலாம்.)
சீரான பற்பராமரிப்புக்கு இரவிலும் காலையிலும் போர்ஹென்ஸ் பற்பசை மற்றும் போர்ஹென்ஸ் டபிள்-ஆக்ஷன் டூத் பிரஷ் உபயோகியுங்கள்... உங்கள் பல் வைத்தியரையும் தவறாமல் கண்டு வாருங்கள்.

**இலவசம்!** ''உங்கள் பற்களையும் ஈறுகளையும் பராமரிக்கும் முறை'' என்னும் விவரமான வண்ணப் புத்தகம்.
இப்புத்தகம்* பெற (தபால் செலவுக்காக) 25 பைசா தபால் தலையுடன் இக் கூப்பனை ''மேனர்ஸ் டென்டல் அட்வைசரி ப்யூரோ, தபால் பை 10031, பம்பாய்-1'' என்னும் முகவரிக்கு அனுப்புக.

பெயர் ______________________ வயது ______ K.6

முகவரி ______________________

*எந்த மொழியில் வேண்டுமோ, அதன் கீழ் கோடிடவும். ஆங்கிலம், இந்தி, மராத்தி, குஜராத்தி, உருது, பஞ்சாபி, வங்காளி, அஸ்ஸாமி, தமிழ் தெலுங்கு, மலையாளம், கன்னடம்.

**போர்ஹென்ஸ்** – பல் வைத்தியரால் உருவாக்கப்பட்ட பற்பசை

129 F-182 TAM

அவன் முகத்தில் சிரிப்புத் தவழ, தன்னை யழைத்த உதவி நிர்வாகியின் முன்னே போய் நின்றான். மாலதி எதிர் நாற்காலியில் உட்கார்ந்திருந்தாள்.

''என்ன மிஸ்டர் மணி! நீங்களெல்லாம் ரொம்ப ஸீனியர்ஸ். மத்தவங்களுக்கு நல்ல வழி சொல்லித் தர வேண்டியவங்க. நீங்களே இப்படி நடந்துக்கலாமா? மிஸ் மாலதி ரொம்ப வருத்தப்படறாங்க. எனக்கும் இது சரியாகப் படலே'' என்றார் உதவி நிர்வாகி.

''என்ன சார் சொல்றீங்க நீங்க? நான் ஒண்ணும் தப்பா நடந்துக்கலியே. இவங்களா எம்மேலே வருத்தப்படறாங்க?'' என்றான் லெட்ஜர் மணி.

''ஒரு வேளை இந்தத் துண்டுச் சீட்டைப் பாத்தா உங்களுக்கு நினைவு வந்துடும்னு நினைக்கிறேன்!''

லெட்ஜர் மணி அந்தச் சீட்டை வாங்கிப் பார்த்து விட்டு ஒன்றும் விளங்காமல் இருவரையும் மாறி மாறிப் பார்த்தான்.

''இதை எழுதி வைச்சிட்டு, பக்கத்திலே இருக்கும் இலக்குவனைக் கூப்பிட்டு மாலதியோட ரியாக்ஷனைக் கவனிக்கச் சொன்னீங்களாமே — நினைவுக்கு வரலியா!''

''சார்! இதிலே என்னமோ தப்பபிப்பிராயம் ஏற்பட்டிருக்கிறதா நினைக்கிறேன். இவங்க எதையும் ஒரு டைம் சென்சோட செய்யறாங்கன்னு அவனைக் கூப்பிட்டுப் பார்க்கச் சொன்னது உண்மைதான். ஆனால் நான் ஒரு ரியாக்ஷனையும் கவனிக்கச் சொல்லலே. இந்தச்சீட்டையும் நான் எழுதி வைக்கலே!'' என்றான் மணி.

''அப்போ இது யாரோட கையெழுத்துன்னு நினைக்கறீங்க?''

''என்னைக் கேட்டா எனக்கு என்ன தெரியும்? இது என் எழுத்து இல்லே. அதோட எங்க செக்ஷன்லே யாரோட கையெழுத்தாவும் தெரியலே. ஆனா, சித்த இருங்க, சொல்றேன். இது வந்து மிஸ் வசந்தியோட, ஐ. ஆம் சாரி, மிஸஸ் வசந்தி பலராமனோட கையெழுத்து. எனக்குத் தெரியும். அவங்க எழுத்தேதான்!''

''அப்படியா?'' என்று மாலதி அந்தச் சீட்டைக் கையில் வாங்கிக் கூர்ந்து பார்த்தாள்.

உடனே இண்டர் காம் போனை எடுத்து வசந்திக்கு டயல் செய்து அவளை அழைத்தாள்.

மாலதியின் குரலைக் கேட்டதுமே வசந்தியின் குரல், ''கங்கிராட்ஸ் மாலதி!'' என்று எதிரிலிருந்த மற்றவர்களுக்கும் எதிரொலிக்கக் கூவியது.

''எதுக்கு வசந்தி?''

''சித்தே முந்திதான் என் வீட்டுக்காரர் ஏர்போர்ட்டிலேயிருந்து எனக்கு போன் பண்ணினார். அதைப் போனிலேயே சொல்லணுமா, நேரில் வந்து சொல்லலாமா?''

''நேரிலேயே வா. போனிலே வம்பு வேண்டாம்.''

மாலதி ரிஸீவரை வைத்துவிட்டு, மணியைப் பார்த்து விட்டு, மிகவும் நயந்த குரலில் மன்னிக்குமாறு கேட்டுக் கொண்டாள். உதவி நிர்வாகியிடமும் கொஞ்சநேரத்தைப் பொறுத்தருள வேண்டிக் கொண்டு தன் இடத்துக்குப் புறப்பட்டாள். பின்னே மணியும் தொடர்ந்தான்.

''தப்பா எடுத்துக்காமல் இருந்தால் சொல்றேன். எனக்கும் கொஞ்சம் தெரியும்னு நினைக்கிறேன். காலையிலே காரிலே வந்தவர் ஏர்போர்ட்டிலே ஏதோ எஞ்சினியரா இருக்கார்னு நினைக்கறேன். அப்படித்தானே? அவர் நம்ம வசந்தி வீட்டுக்காரர் பலராமனுக்கு ரொம்ப வேண்டியவர். ரெண்டு பேரும் ஏர்போர்ட்டிலே இருக்கிறதனாலே கல்யாணத்தின் போது பலராமன் கூடவே இருந்தார். இன்னிக்கு அவர்களுக்குள்ளே உங்க விஷயமா ஏதோ பேச்சு நடந்துதான் மிஸஸ் வசந்தி இப்படி எழுதி வைச்சிருக்கணும்னு நினைக்கிறேன்'' என்றான் மணி.

''இருந்தாலும் எல்லாத்தையும் நீங்க ரொம்பத்தான் நினைக்கிறீங்க! மிஸ்டர் பலராமனை — அதாவது வசந்தியோட வீட்டுக்காரரை உங்களுக்கு எப்படிப் பழக்கம்?''

''இது என்ன இப்படிக் கேக்கறீங்க! மிஸஸ் வசந்தி கல்யாணத்தப்போ உதவிக்கு நான் கடைசி வரையிலே இருந்தவனாச்சே. அவங்க உங்களைப் போல் இந்தச் செக்ஷன்லே இருந்தப்பத்தானே கல்யாணமே ஆச்சு. மறந்திட்டீங்களா? நீங்க உட்கார்ந்திருக்கிற — மேஜையே கல்யாணம் பண்ணி வைக்கிற மேஜையாச்சே!''

''ஸ் ... சரி, சரி, நான் வரேன்'' என்று மாலதி விரைந்தாள்.

போனதுமே வசந்தியை டயல் செய்து அழைத்தாள்.

''ஏய் வசந்தி, என்ன நீ என்னமோ புதிரெல்லாம் போட்டு என்னைக் கலாட்டா பண்ணறே?''

''நான்தான் நேரே வரேன்னு சொன்னேனே. அதுக்குள்ளே உனக்குப் பொறுக்கல்லியா?''

''நீ வர போது வா; விஷயத்தைச் சுருக்கமாச் சொல்லேன்!''

''நம்ம ஸொஸைட்டியிலே பெண்ணாகப் பிறந்தாலே பெரிய பிராப்ளம்தான். அதிலேயும் வேலைக்குப் போற பெண் ஒவ்வொருத்தருக்கும் ஒவ்வொரு தினுசான பிரச்னை. எல்லாம் எப்படியோ ஒருவழியாத் தீர்ந்து ஒரு நிலைக்கு வந்து விடும். ஒண்ணு ரெண்டு தீராமலே போகலாம். ஆனா உன் விஷயத்திலே என்ன அதிருஷ்டம் பாரேன். நினைச்சே பார்க்காத விதத்திலே நடந்திருக்கு! நீ சம்மதம்னு சொன்னா உன் பிரச்னை ஒரு நொடியிலே ஸால்வ் ஆயிடும். உங்க அப்பா அம்மாவுக்கு — குடும்பத்துக்கு நீ எப்பவும் போல உதவி பண்ணலாம். அதுக்குச் சம்மதிக்கிற மாப்பிள்ளை வந்தால் உனக்குச் சம்மதம் தானே? நீ அவரை நேரே பார்க்கவேண்ணும் சொல்ல வழியில்லே. அவர் காரிலேயே இன்னிக்கு ஏறி வந்திருக்கே. என்ன சொல்லறே?''

''நான் என்ன சொல்றது? நீதான் அதுக்குள்ளே வாழ்த்தே எழுதி வைச்சிருக்கியே. பாக்கலாம், யோசிச்சுச் சொல்றேன்!'' என்றாள் மாலதி.

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran


கண்களை ஒருபோதும் கசக்க வேண்டாம்...
கரிக்கும் கண்களுக்குத் தேவை
வைஸின்
கரித்தாலும், களைப்படைந்தாலும், கூசினாலும்
கண்களைக் கசக்காதீர்கள். சிவந்த கண்களை
நிமிட நேரத்தில் இதமுடன் தெளிவாக்கு-
வதற்கு வைஸின் இருக்கிறது.
வைஸின் உபயோகியுங்கள்.
கண்கண்ட பலனை உலகெங்கும்
உணர்த்தியுள்ளது வைஸின்.
அது வன்மை வாய்ந்தது,
எனினும் மென்மை கனிந்தது.
எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.
சில்லறை விலை ரூ. 2.97
(தல வரிகள் தனி.)
வைஸின்
கலங்கிய கண்களிலே கதிரொளி மீட்பது வைஸின்
Visine eye drops
60 வினாடிப் பரிட்சை
இந்த எளிய வைஸின்
பரிட்சையை ஏற்றுப்
பாருங்கள். சிவந்த ஒரு
கண்ணிலே இரு சொட்டு
வைஸின் விட்டுக்
கொள்ளுங்கள். ஒரு நிமிடம்
கழித்துக் காண்பீர்கள் அத்தாட்சி
—ஒரு விழியில் சிவப்பு, மறு
விழியில் தெளிவு. (இனி, சிவந்த
விழியிலும் வைஸின் இட்டு
தெளிவாக்குங்களேன்.
கண் சிவப்போ, கரிப்போ
நீடித்தால், டாக்டரிடம்
ஆலோசனை கேளுங்கள்).
Pfizer
Pfizer பைஸர் தயாரிப்பு: "உலக நலனை நாடும் விஞ்ஞானம்"

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon